# வசந்தி வீட்டிலேயே தங்குகிறாள்

சந்தையில்





































**ஸன்லைட் சோப்** துணிகளை நீடித்திருக்கச் செய்கிறது

இந்தியாவில் தயாரித்தது

S. 326 50 TM



# கல்கி

மலர் :
இதழ் 12

மன்மத
ஐப்பசி 6

## பொருளடக்கம்

### 1955 அக்டோபர் 23



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

இத்தகைய

# மகத்தான படம்

இதுவரை
வெளிவந்ததில்லை...



# இன்ஸானியத்

உங்கள் அபிமானமிகுந்த **திலீப் குமார் · தேவ் ஆனந்த் · பீனா ராய் ·**
**ஜிப்பி** நடித்தது....

## ஜெமினி தயாரிப்பு...

**21-ஆம் முதல்**

| | | |
|---|---|---|
| பெங்களூர் – ஸ்டேட்ஸ் | மங்களூர் – ஜோதி | திருவனந்தபுரம் – சென்ட்ரல் |
| மைசூர் – உட்லண்ட்ஸ் | எர்ணாகுளம் – லக்ஷ்மண் | கோழிக்கோடு – கிரௌன் |
| தேவநகரி – சாந்தி | ஆலப்புழை – சீமாட்டி | |

**28-ஆம் முதல்**

சென்னை **வெலிங்டனிலும்** மற்றும்
பல முக்கிய நகரங்களிலும்...






மலர் 15 | இதழ் 12

தமிழ்த்திரு நாடு தன்னைப் - பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்,

மன்மத ௵ ஐப்பசி 6


# புது ஏற்பாட்டுக் கமிட்டியின் சிபார்சுகள்

தமிழ் பேசும் மக்கள் வாழ்கிற திருவாங்கூர்ப் பிரதேசங்களைத் தமிழ் நாட்டுடன் சேர்த்து விடுவது என்று ஒரு தீர்மானத்துக்கு வந்தாயிற்று. அதன் பிறகு தேவி குளம், பீர்மேடு ஆகிய பிரதேசங்களை மட்டும் திருவாங்கூர் ராஜ்யத்துக்கு விட்டுவிட வேண்டும் என்று சொன்னால் அதில் யாருமே நியாயம் காணுவதற்கில்லை. இந்த அநியாயத்தை ஆட்சேபித்துத் திருவாங்கூர்த் தமிழ் நாடு காங்கிரஸ் தலைவர் சென்னை முதலமைச்சரையும் மற்றும் தலைவர்களையும் கண்டு பேசியிருக்கிறார். ஆட்சேபத் தந்திகளும் கடிதங்களும் தீர்மானங்களும் நம்முடைய காரியாலயத்துக்கும் வந்து குவிகின்றன. தலைவர்களுக்கும் அரசாங்கத்துக்கும் அந்தப் பிரதேசத்து மக்கள் ஆட்சேபத் தந்திகளும் கடிதங்களும் அனுப்பிக் கொண்டுதான் இருப்பார்கள்.

ஏற்கனவே சிக்கலுக்கு உள்ளாகியிருக்கும் மக்களை இப்பொழுது இரண்டு கூறாகப் பிரித்து, இங்கொரு துண்டும் அங்கொரு துண்டுமாக விநியோகப்படுத்தினால் கஷ்டம் அதிகரிக்கவே செய்யும். இரண்டு ராஜ்யங்களிலுமே அந்த மக்களுக்குத் தொல்லைகள் ஏற்படும். இரண்டாகத் துண்டித்துப் போய் விட்டதால் அந்த மக்களுக்குத் தொல்லைகளை எதிர்த்து நிற்கும் சக்தியும் குறைந்து போய் விடும்.

ராஜ்யத்தைப் பாஷையின் அடிப்படையில் பிரித்த போதிலும், சர்க்கார் உத்தியோகங்கள் சம்பந்தப்பட்ட வரை மக்களுக்கு இங்கும் இடமுண்டு, அங்கும் இடமுண்டு என்று சொல்வதும், அதற்கு உரிய முறையில் நிபந்தனைகளை அமைப்பதும் அர்த்தமில்லாத ஏற்பாடு. முள் படுக்கையைப் போட்டு அதன் மேல் படுக்கச் சொல்கிற காரியம் அது!

இதெல்லாம் ஒருபுறம் இருக்க, மொத்தத்தில் இந்தப் புதிய ஏற்பாட்டினால் தென்னிந்திய மக்களுடைய நிலைமை என்ன என்பதை ஆராய வேண்டும். அகில இந்தியா முழுவதையும் ஒரே ராஜ்யமாகச் செய்து விட்டால் அந்த ஏற்பாடு வேறு மாதிரி. இந்திய நாடு முழுவதற்கும் ஒரு சட்டசபை, ஒரு மந்திரி சபை - அவை அகில பாரத ராஜ்ய நிர்வாகத்தை நடத்துவது என்று தெள்ளத் தெளிவாக முடிந்து போகும். அப்போது பாரத நாட்டை ஜில்லா ஜில்லாவாகப் பிரித்து விட்டு ஜில்லா போர்டுகளை அமைத்து, ஜில்லா உத்தியோகஸ்தர்களை நியமித்து நிர்வாகம் செய்யலாம். இது காரியாம்சத்தில் முடியாத காரியம் இல்லை. இப்போதுதான் வர வர என்ன நடக்கிறது? ஒரு ஜவாஹர்லால் நேருவையும், ஒரு ப்ளானிங் கமிஷனையும் எதிர்பார்த்துத்தான் எல்லாம் நடக்கிறது. ஆண்டுதோறும் செய்ய வேண்டிய தீராத செலவுகளை மாற்ற வழியில்லை. மற்றப் புதுக் காரியங்களில் எல்லாம் ப்ளானிங் கமிஷன் போட்டு வரும் ஐந்தாண்டுத் திட்டமும், அதற்கு என்று 'மேலா'வில் போட்டுத் தரும் செலவுத் திட்டமுமே ராஜ்ய நிர்வாகம் போலத் தோற்றமளித்து வருகிறது. ராஜ்ய சட்டசபைகளில் போட்டுக் காட்டும் பட்ஜெட்டுகள் வெறும் நிழல் படங்கள்தான்! எதற்கும் டில்லிக்கு விமானம் ஏறிச்சென்றுதான் விஷயங்கள் விவாதிக்கப்பட்டு முடிவாகின்றன. பொய்யான மாரீச மான்களையும், பேய்த் தேர்களையும் விட்டு விட்டு உண்மையை நேருக்கு நேராகப் பார்த்தோமானால், அகில இந்திய நிர்வாகம் ஒன்றுதான் இப்போது காரியாம்சத்தில் நடைபெறுகிறது. சில்லறைச் சின்னஞ் சிறு சண்டைகளுக்குத்தான் ராஜ்ய நிர்வாகம் பயன்பட்டு வருகிறது. சிலர் பெரும் பேச்சுக்கள் பேசுவதெல்லாம் வெறும் பேச்சுத்தான்.

இந்த நிலை சரியல்ல. ராஜ்ய நிர்வாகத்துக்கும் மாகாணச் சட்ட சபைக்கும், மாகாண மந்திரி சபைக்கும் உண்மையான சுதந்திரமும் செல்வாக்கும் இருக்க வேண்டும் என்று கோரினோமானால், இப்போது ஆலோசனை செய்யப்பட்டுள்ள குட்டி




பிரிந்து போன தெலுங்கர்களை மறுபடியும் வாருங்கள் என்று நாம் அழைக்க வேண்டாம். அவர்களாக வந்தால் வரட்டும். எப்போது வந்தாலும் வரட்டும். நாம் வற்புறுத்த வேண்டியதில்லை. அதுவரையில் நம்முடைய தெற்கு ராஜ்யம் அல்லது தக்ஷிணப் பிரதேசம் எதிர்ப் பக்கத்திலுள்ள படத்தின்படி இருக்கலாம்.

தென் ராஜ்யத்துக்கு ஒரு கவர்னரும் ஒரு சட்டசபையும் பத்துப் பேர் அடங்கிய ஒரு மந்திரி சபையும் போதும். பிரதேச உட்பிரிவுகளுக்கு ஏற்ப உதவி மந்திரிகள் இருக்கலாம். தற்போது ரிவின்யூ, கல்வி, சுகாதாரம், விவசாயம் என்று வெவ்வேறு இலாகாக்களுக்கு மந்திரிகள் இருப்பது போல மங்களூர் மந்திரிகள், தமிழ் நாட்டு மந்திரிகள், மலையாள மந்திரிகள், திருவாங்கூர் மந்திரிகள், மைசூர் மந்திரிகள் என்று அந்தந்தப் பிரதேசங்களின் காரியத்தைக் கவனிக்க அந்தந்தப் பிரதேசத்துக்கு ஏற்ற எண்ணிக்கையில் மந்திரிகள் இருந்து வரலாம். சிலர் மட்டும் அகில தென் ராஜ்ய மந்திரிகளாக மேற்பார்வை செய்து வரலாம்.

ராஜ்யங்கள் அதற்கு உதவாது. பம்பாய், மத்தியப் பிரதேசம், உத்தரப் பிரதேசம் இவற்றுக்குச் சமானமான விஸ்தீரணமும், ஜனத் தொகையும், வருமானமும் தென் மக்கள் வாழும் பிரதேசத்துக்கும் இருக்க வேண்டும்.

இம்மாதிரி ஒரு ஏற்பாட்டை அமைத்துக் கொள்வது நிச்சயம் நம்மால் முடியக்கூடிய ஒரு காரியந்தான். இதுவரையில் சென்னை ராஜ்யமாக இருந்த பிரதேசமும், மைசூரும், திருவாங்கூரும் கொச்சியும் சந்தேகங்களையும் பூசல்களையும் உதறித் தள்ளிவிட்டு ஒன்று சேர்வதில் என்ன கஷ்டம்! ஒரே வரி வடிவத்தில் எழுதினால் கன்னடமும், மலையாளமும், தமிழும் ஒரே பாஷைதான். இம்மக்களின் பண்பாடு, படிப்பு, மனோபாவம் கோயில் குளம் எல்லாம் ஒன்றே. ஸம்ஸ்க்ருத பாஷையோடு ஒட்டிய பிராக்ருத பாஷைகள் வடக்கே பிரயோகத்தில் இருப்பதுபோல, இந்தத் தென் பிரதேசத்தில் தமிழும் தமிழின் இனமொழிகளுமே மக்களின் தாய்மொழி. சமீபகாலம் வரை எல்லாரும் சென்னை ஸர்வகலாசாலைக் கல்லூரிகளில் படித்துப் பழகி வந்தவர்கள். மாமன் மகளும், அத்தை மகளும் திருமணம் செய்து கொள்ளலாம் என்ற தக்ஷிண ஆசாரத்தைக் கடைப்பிடிக்கும் மக்கட் தொகுதிதான் இவர்கள் அனைவரும். எல்லா விதத்திலும் ஒரு கூட்டம். யோசித்துப் பார்த்தால் என்ன பேதம் உண்டு!

மேலே கண்டவாறு அமைத்துக் கொண்டால் நிர்வாகம் ஜனங்களுக்குத் திருப்தி தருவதாய் இருக்கும். தென் தேச மக்களுடைய செல்வாக்கும் குறைந்து போகாமல் உத்தரப் பிரதேசத்துக்குச் சமமாக இருக்கும். பாரத நிர்வாகம் நீதி முறையில் நடந்தேறும். குறுகிய மனப்பான்மைகள் படிப்படியாக மறைந்து போகும். தமிழுக்கு ஆபத்து வந்து விட்டது என்று எண்ணி அதை ஆபத்தினின்று மீட்டு அதற்குச் சேவை செய்வோம் என்கிற நோக்கத்தைக் கொண்டு, தென்னாட்டைத் துண்டு துண்டாகப் பிரித்து அதன் அரசியல் நிலைமையைத் தாழ்த்தி விடுவதற்குச் சம்மதித்துவிடலாகாது. தமிழ் மொழியின் வளர்ச்சிக்காக நாட்டைப் பிரிக்க வேண்டிய அவசியமேயில்லை. மொழி அன்பும் நல் முயற்சியும் இருந்தால் அதைப் பற்றிக் கவலையே வேண்டாம். அது வளர்ந்து வருகிறது. அதைத் தடுக்க யாராலும் முடியாது. அதற்காகச் சென்னை ராஜ்யத்தை மதிப்பிழந்த குறுநிலமாக ஆக்கி விட வேண்டியதில்லை.

உட்பிரதேச மந்திரிகள் அந்தந்தப் பிரதேச மொழிகளின் வளர்ச்சியைப் பற்றியும், அந்தந்த மொழி நூல்களைப் பற்றியும், அந்தந்த மொழியின் மூலம் கலாசாலைகளில் படிப்பு நடத்தும் விஷயத்திலும் இப்போதை விட

நம்பிக்கையுடனும் அதிக ஊக்கத்துடனும் வேலை செய்வார்கள் என்பதில் சந்தேகமில்லை.

பாரத நாட்டின் ஐக்கியம் அதன் எல்லா பாகங்களின் சமாதான சந்தோஷத்தின்மேல் தான் நிற்க முடியும்—ஒரு மாளிகையின் பலம் அதன் கம்பங்களில் பரவி நிற்பதுபோல. இதை உணர்ந்து மாளிகையின் பலத்தைக் கம்பங்களிலே சமன் செய்ய வேண்டும். ஒரு பிரதேசத்தை மட்டும் நடுக் கூடமாகக் கட்டி விட்டு மற்றப் பிரதேசங்களை வெறும் தாழ்வாரங்களாகவும் வராந்தாக்களாகவும் செய்து பாரத மாளிகையை அமைப்பது நியாயமாகாது. அழகாகாது. பலமாகாது.

தென்னாட்டு மக்கள் இந்த விஷயங்களை எல்லாம் தீர ஆலோசித்து ஒரு முடிவுக்கு வந்து ஏகமனதாக வற்புறுத்தி வெற்றி காண வேண்டும். இல்லாவிடில் அகில இந்தியத் தராசில் தெற்குத் தட்டு பாரம் இழந்து போய் நிற்கும். நஷ்டம் அடைவோம். முதலியார், நாடார், பிராமணர், வன்னியர், மறவர் என்று ஜாதிச் சண்டைகள்தான் மீறும். பூசல்கள் புதிய முனைகள் விட்டுக் கொண்டு வளரும்.

சின்னஞ்சிறு துண்டுகளாக வெட்டப்பட்டு அமைந்தால் தேர்தல் போட்டிகளில் வெற்றி பெறுவது எளிது என்றும், நிர்வாகத்தைச் சுலபமாக நடத்தவும் செய்யலாம் என்றும் சிறுமையில் ருசி கண்டு ஏமாந்து போனோமானால், முடிவில் எல்லோருமே பலவீனர்களாகப் போக வேண்டியதுதான். பிறருடைய தயவை அண்டிப் பிழைக்க வேண்டிய நிலை ஏற்பட்டு விடும். பாடுபட்டுத் தியாகங்கள் செய்து பெற்ற சுதந்திரம் யதேச்சாதிகாரமாக முடியும். அந்த நிலைமை ஏற்பட்டு விட்டால், பிறகு திருத்த முடியாது. அதற்கு இடம்

தக்ஷிணப் பிரதேசம்




கொடுக்காமல் இப்பொழுதே விழித்துக்கொள்வதுதான் புத்திசாலித்தனமாகும்.

நாம் சொல்லும் இந்த யோசனை மிகப் புதிதாகத் தோன்றலாம். ஒரு நாட்டின் சரித்திரம் போகும் போக்கில் அவ்வப்போது ஏற்படும் நிலைமைக்குத் தகுந்தவாறு இயற்கை வேகங்களை அலசி ஆராய்ந்து தைரியத்துடன் புதுக் கருத்துக்களை உட்கொண்டு நிறைவேற்றுவதுதான் அரசியற் புலமையாகும்.

# என்ன சேதி?

## இலங்கை சர்க்காரின் கடமை

இலங்கை இந்தியர் பிரச்னையைத் தீர்ப்பதற்காக மறுபடியும் இந்தியா பிரதம மந்திரியும் இலங்கைப் பிரதமரும் சந்தித்துப் பேச வேண்டும் என்று டில்லியில் உள்ள இலங்கை ஹை கமிஷனர் இலங்கை சர்க்காருக்குச் சிபார்சு செய்துள்ளார். இந்த யோசனையை இலங்கை மந்திரி சபை ஆலோசனைக் கமிட்டியும் ஆதரிப்பதாகத் தெரிகிறது. புது டில்லி ஒப்பந்தத்தை அறவே புறக்கணித்து விட்டு, இந்தியாவை விரோதித்துக் கொள்ள இலங்கை சர்க்கார் விரும்பவில்லை. அதே சமயம் இலங்கை இந்தியர்களுக்கு நியாயமான உரிமைகள் வழங்கவும் அவர்களுக்கு மனம் வரவில்லை!

சமீபத்தில் நடந்த பிரஜா உரிமை வழக்குகளில்கூட இலங்கை சுப்ரீம் கோர்ட்டார், பிரஜைப் பதிவு அதிகாரிகள் குறுகிய நோக்கம் கொண்டவர்களாக இருக்கிறார்கள் என்று மீண்டும் கண்டித்துக் கூறியுள்ளனர். இலங்கை இந்தியர் பிரச்னை சம்பந்தமாக இந்தியா மிகுந்த பொறுமை காட்டி வருகிறது என்றும், எனவே இனியும் காலம் கடத்தாமல் இலங்கை சர்க்கார் பித்தலாட்டங்களை விட்டு விட்டு நேர்மையுடன் நடந்து கொள்ள வேண்டும் என்றும் இலங்கைப் பத்திரிகைகளே புத்திமதி கூறியிருக்கின்றன.

இலங்கை மந்திரிகளிடையே மனமாற்றம் ஏற்பட்டாலன்றி, இரண்டு பிரதம மந்திரிகளும் மீண்டும் மீண்டும் சந்தித்துப் பேசுவதால் என்ன நன்மை ஏற்பட முடியும்? ஏற்கனவே, ஜவாஹர்லால்ஜி இலங்கை இந்தியர் பிரச்னை சம்பந்தமாக முன்னாள் இலங்கைப் பிரதமருடனும், தற்போதையப் பிரதமருடனும் கலந்து பேசினார். அதன் பலனாக ஒப்பந்தத்துக்கு மேல் ஒப்பந்தம் ஏற்பட்டது! அப்படியிருந்தும் பிரச்னை தீரவில்லையெனில், அதற்குக் காரணம் இலங்கை சர்க்காரின் மன நிலையேயன்றி, அதற்கு இந்திய சர்க்காரோ, இலங்கை

# அகத்தியரின் ஆச்சரியம்!




இந்தியர்களோ பொறுப்பாளிகள் அல்ல. மறுபடியும் ஜவாஹர்லால்ஜியைச் சந்திக்கு முன், இலங்கை இந்தியர்களுக்கு நீதிவழங்குவதே தங்கள் நோக்கம் என்பதை இலங்கை சர்க்கார் காரியத்தில் நிரூபித்துக் காட்ட வேண்டியது முக்கிய கடமை. அப்போதுதான் இரு தேசப் பிரதமர்களின் சந்திப்பு பலனை அளிப்பதற்கான சூழ்நிலை ஏற்படும்.

சென்ற வாரம் கொழும்பில் வகுப்பு வெறியை அடிப்படையாகக் கொண்டு நிகழ்ந்துள்ள கலவரங்கள், இலங்கை இந்தியர் பிரச்னையையும் சிங்கள-தமிழ் பிரச்னையையும் இலங்கை சர்க்கார் மேலும் காலம் கடத்தாமல் தீர்க்க வேண்டியது அவசரம் என்பதையே காட்டுகின்றன.

## உதவி புரியக் கோருகிறோம்

பஞ்சாப் ராஜ்யத்தில் பெரு மழை காரணமாக நதிகள் உடைத்துக் கொண்டு ஆயிரக் கணக்கான சதுர மைல்கள் தூரம் வெள்ள மயமாகி விட்டது. சுமார் இரண்டு லட்சம் வீடுகளும் ஐம்பது கோடி ரூபாய் பெறுமானமுள்ள பருத்தி, நெல் பயிர்களும் நாசமானதுடன், ஆயிரக்கணக்கான மக்களும் பலியாயினர் என்றால் வெள்ளத்தின் கொடுமையைக் கற்பனை செய்து கொள்ளலாம். சென்ற அறுபது வருஷங்களில் இத்தகைய கோர வெள்ளம் ஏற்பட்டதில்லை என்று ஜவாஹர்லால்ஜி மனம் உருகியிருக்கிறார்.

மற்றொருபுறம் யமுனா நதியில் வெள்ளம் ஏற்பட்டுப் புது தில்லியும் கஷ்ட நஷ்டங்களுக்கு இலக்காகி யிருக்கிறது. வெள்ளத்தினால் தவிக்கும் மக்களுக்குப் பொதுவாக அதிகாரிகளும் குறிப்பாக இராணுவத்தைச் சேர்ந்தவர்களும் பேருதவி புரிந்து வருகிறார்கள். பாரதநாடு உலகமே வியக்குமாறு சுபிட்சப் பாதையில் முன்னேறி வரும் இச்சமயத்தில் இத்தகைய கஷ்ட நஷ்டங்கள் ஏற்படுவது இயற்கையின் சோதனை போலும். மனிதரின் சக்திக்கு அப்பாற்பட்ட இத்தகைய சோதனைக் காலம் வரும்போது இறைவனைப் பிரார்த்திப்பதைத் தவிர வேறு வழி என்ன இருக்கிறது? வெள்ளக் கொடுமையால் கஷ்ட நஷ்டம் அடைந்துள்ள மக்கள் விஷயத்தில் பூரண அநுதாபம் கொண்டு ரஷ்யா, பிரிட்டன் முதலிய பல நாடுகள் உதவி புரிய முன் வந்துள்ளன. அக் கொடுமைக்கு இலக்கான மக்களுக்கு உதவி புரிவதில் பாரத மக்கள் தங்கள் பங்கைக் குறைவின்றிச் செய்வார்கள் என்பதில் ஐயமில்லை.

# இலங்கையில் மொழித் தகராறு

கொழும்பு, அக்டோபர் 15உ.

இவ்வாரம் கொழும்பு நகர மண்டபத்தில் நடைபெற்ற ஒரு பொதுக் கூட்டம் பெரிய அமளி துமளியிலும் போலீஸ் தடியடிப் பிரயோகத்திலும் முடிந்தது. இந்தச் சம்பவம் பாஷைப் பிரச்னையைப் பற்றி நாட்டில் நடைபெறும் அதி தீவிரமான வகுப்புவாதப் பிரசாரங்கள் எவ்வளவு பாரதூரமான விளைவுகளை உண்டுபண்ணும் என்பதற்கு ஒரு கடுமையான எச்சரிக்கையாயிருப்பதோடு, தமிழ் பேசும் மக்களுக்கு ஒரு பெரிய அதிர்ச்சியையும் உண்டுபண்ணியிருக்கிறது.

தமிழ், சிங்களம் ஆகிய இரண்டு பாஷைகளையுமே ராஜாங்க மொழிகளாக்க வேண்டுமென்று கோருவதற்காகக் கொழும்பு நகர மண்டபத்தில் ஒரு பொதுக் கூட்டம் நடந்தது. காஷாயம் தரித்த அனேகம் பௌத்த பிக்குகள் உள்பட ஆயிரக் கணக்கானவர்கள் கொண்ட ஒரு பெருங் கூட்டம் நகர மண்டபத்துக்கு வெளியே திரண்டு நின்று கற்களையும் பாட்டில்களையும் வீசியெறிந்து கூட்டத்தைக் கலைக்க முயன்றது. இதன் விளைவாக ஏற்பட்ட கைகலப்பில் பத்திரிகைக்காரர்கள் உள்படப் பலர் பலமாகத் தாக்கப்பட்டார்கள். போலீசார் தடியடிப் பிரயோகம் செய்து கூட்டத்தைக் கலைத்து அமைதியை நிலைநாட்டினர். நகர மண்டபப் பகுதியில் கலகம் அடங்கியபோதும் வேறு சில பகுதிகளில் தமிழர்களின் கடைகளை உடைத்துச் சூறையாடிக் கலகம் செய்ய முயன்றனர். போலீசாரின் திறமையான கண்காணிப்பினால் நிலைமை மோசமடையாமல் தவிர்க்கப் பட்டது. போலீஸ் சற்று அஜாக்கிரதையாக இருந்திருந்தால் நிலைமை கேவலமாகி யிருக்கும்.

இதற்கிடையில் கொழும்பு நகரத்திலுள்ள சில தெருக்களின் பெயர்ப் பலகைகளில் சிங்களப் பெயர்களை மாத்திரம் வைத்துவிட்டு, தமிழ், ஆங்கிலப் பெயர்களைத் தார் பூசி அழித்திருக்கிறார்கள். இந்தச் சம்பவங்கள் தமிழ் பேசும் மக்களின் கவலையையும் பீதியையும் அதிகரித்திருப்பதோடு அவர்களுக்கு ஆத்திர மூட்டுவதாகவுமுள்ளன. இதற்கெல்லாம் அரசாங்கத்தின் ஸ்திரமற்ற கொள்கைதான் மூலகாரணமென்று பொதுவாகச் சொல்லப்படுகிறது. சென்ற பல மாதங்களாகவே பாஷைப் பிரச்னையைப் பற்றி நாட்டின் பல பகுதிகளிலும் காரசாரமான விவாதம் நடைபெற்று வருகையில் இந்த விவாதங்களுக்கு முடிவு கட்ட அரசாங்கம் ஒரு ஸ்திரமான கொள்கையைக் கடைப்பிடித்துத் திட்டவட்டமான அறிக்கையை வெளியிட்டிருக்க வேண்டும். அரசாங்கக் கொள்கை யென்று அடிக்கடி மேலெழுந்தவாரியாக வர்ணிப்பதைப் போல தமிழ், சிங்களம் ஆகிய இரண்டு பாஷைகளையும் உத்தியோக பாஷைகளாக்குவது அரசாங்கத்தின் உண்மையான கொள்கையாயிருக்குமானால், அதைப் பிரதமர் ஸர் ஜான் திட்டவட்டமாக அறிவிப்பதோடு இக்கொள்கைக்குத் தேச மக்களின் ஆதரவைப் பெறவும் வழி வகைகள் செய்திருக்க வேண்டும்.

* * *

சென்ற வருட டிஸம்பர் மாதத்துக்கும் நடப்பு வருட செப்டம்பர் மாதத்துக்குமிடையில் உள்ள பத்து மாதங்களுக்குள் இலங்கையிலிருந்து இருபதினாயிரம் இந்தியர்கள் ஒரேயடியாக இந்தியாவுக்கு வெளியேறியிருப்பதாக உத்தியோக ரீதியான புள்ளிவிவரங்கள் கூறுகின்றன. இந்தியர் விஷயமாக இலங்கை கடைப்பிடிக்கும் கடுமையான சட்ட திட்டங்களின் பயனாய் மாதம் சராசரியாக இரண்டாயிரம் பேர்கள் வீதம் இந்தியாவுக்குத் திரும்பியிருக்கின்றனர். இவர்களில் அனேகர் இலங்கையில் பல வருட காலமாகத் தொடர்ந்து தொழில் நடத்தி வந்தவர்கள். இங்கு இந்தியப் பிரஜைகளாக மேலும் சுமார் எண்பதினாயிரம் பேர்கள் வரையில் இருப்பார்களென்று மதிப்பிடப்படுகிறது. இவர்களையும் படிப்படியாக வெளியேற்ற இமிகிரேஷன் சட்ட திட்டங்களை அதிகாரிகள் இறுகப் பிடித்திருக்கிறார்கள். வியாபாரத் துறையில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு மட்டும் ஓரிரண்டு வருடங்களில் வியாபாரத்தை மூடிக்கொண்டு இந்தியாவுக்குத் திரும்பிவிட வேண்டுமென்று இறுதி நோட்டீஸ் கொடுக்கிறார்கள். மற்றவர்களுக்கு இலங்கையை விட்டு வெளியேற மூன்று முதல் ஆறுமாத காலம் தவணை யளித்து நோட்டீஸ் பிறப்பிக்கப்படுகிறது.

* *

திருப்பெருந்திரு குன்றக்குடி அடிகளார் சென்ற ஒரு வார காலமாக இலங்கையின் பல பாகங்களிலும் சுற்றுப்பிரயாணம் செய்து ஆன்மீகப் பிரசாரம் செய்து வருகிறார். கடவுள் பெயரை ஜபிப்பதால் மட்டும் ஒருவன் பக்தனாகி விடமாட்டானென்றும் தெய்வ பக்தியுடன் சகோதர ஜனங்களுக்குச் சேவை செய்தாலே முக்தி பெற முடியுமென்றும் தீண்டாமையை அறவே ஒழிக்க வேண்டுமென்றும் ஒவ்வொரு கூட்டத்திலும் அடிகளார் வற்புறுத்திச் சொல்லி வருகிறார்கள்.

—ரஜனி.

அட்டைப்பட விளக்கம்

## பம்பாயில் கலைவிழா

பம்பாய் மாதுங்காப் பகுதியில் மாதர் கலைச் சங்கத்திலே கலை விழா கோலாகலமாக நடைபெறுகிறது. நட்சத்திர நங்கை அரங்கிலே தோன்றிப் பாரதியாரின் பாடலுக்கு அபிநயம் பிடிக்கிறாள். அப்பொழுது நேர்கிற அந்த எதிர்பாராத சம்பவத்தை இந்த இதழ் 'ரவிச்சந்திரிகா'விலே காணலாம்.

சரஸ்வதி பூஜையை யொட்டி வெளி வருகிற இந்த வாரக் 'கல்கி'யின் அட்டையில், கலைமகளின் திருவுருவப் பின்னணியோடு, மாதுங்காவில் நடைபெற்ற அந்த நட்சத்திர நடனத்தை மூவர்ணத்திலே சித்திரிக்கிறார் ஓவியர் மணியம்.




## 91. ராவணன் முடிந்தான்

லங்கையில் ஒவ்வொரு வீட்டிலும் பெண்களுடைய அழுகுரல்.

ராவணனுடைய துக்கமும், வெட்கமும் கோபமும் கொந்தளித்துக் கடல் போல் பொங்கிற்று. இனி தானே தன் மூல பலத்துடன் யுத்தம் செய்து இந்தச் சத்துருவை அழிக்க வேண்டும் என்று தீர்மானம் செய்துகொண்டு புறப்பட்டான். தன் பலத்தைப் பற்றியும் சௌரியத்தைப் பற்றியும் தான் அடைந்த வரங்களின் சக்தியைப் பற்றியும் அவனுக்குச் சந்தேகமே இருக்கவில்லை. ஆனபடியால் வெகு தைரியமாகவே சென்றான்.

எட்டுக் குதிரைகள் பூட்டி, எல்லா வித ஆயுதங்களும் நிறைந்த திவ்விய மான தன் தேரில் ஏறினான்.

ரதம் பூமி அதிரச் சென்றது. அரக்க வீரர்கள் பலர் தத்தம் தேர்களில் ஏறி அவனைச் சூழ்ந்து சென்றார்கள்.

லங்கையிலிருந்து ராவணன் புறப்பட்டதும் பட்சிகள் கோரமாகக் கூவின; சூரியனுடைய ஒளி மங்கிற்று. இன்னும் பல கெட்ட சகுனங்கள் காணப்பட்டன. ராவணன் இவற்றைக் கொஞ்சமும் பொருட்படுத்தாமல் வடக்குக் கோட்டை வாயில் வழியாக யுத்தகளத்துக்குச் சென்றான். விரூபாக்ஷன், மகோதரன், மகாபார்ச்வன் என்ற அரக்க வீரர்கள் ராவணனைத் தொடர்ந்து தங்கள் ரதங்களில் சென்றார்கள்.

ராவணனைத் தொடர்ந்து சென்ற வீரர்கள் சுக்ரீவனாலும் அங்கதனாலும் வீழ்த்தப்பட்டு உயிர் நீத்தார்கள். லக்ஷ்மணன் லங்கேசனை எதிர்த்தான். லக்ஷ்மணனுடைய தாக்குதலை ராக்ஷச ராஜன் கொஞ்சமும் லட்சியம் செய்யவில்லை. லக்ஷ்மணனுடைய அம்புகளைத் தன் பாணங்களால் எளிதாக அகற்றி விட்டு, ராவணன் ராமனை நோக்கி நேராகச் சென்று தாக்கினான். பல மான பாணங்களைச் செலுத்தினான். அவற்றை ராமன் தன் பாணங்களால் தடுத்து விட்டதைக் கண்டு, இன்னும் அதிக சக்தி பொருந்திய பாணங்களைப் பிரயோகம் செய்தான். அதிலும் பயன் அடையவில்லை. யுத்தம் மிகக் கடுமையாக வெகுநேரம் நடந்தது.

ராவணனுடைய நாராசங்கள் ராமனுடைய நெற்றியில் பட்டும் அவை அவனை ஒன்றும் சேதப்படுத்தவில்லை. ராமனுடைய கோதண்டத்திலிருந்து பாய்ந்த சரங்களும் ராவணனுடைய கவசத்தைப் பிளக்கவில்லை. ராமனுடைய அஸ்திரங்களை ராவணனும் தன் பாணங்களால் தடுத்துத் தள்ளினன்.

இவ்வாறு ராவணனுக்கும் ரகுவீரனுக்கும் அற்புத யுத்தம் நடந்தது. இரு பக்கத்தில் விடப்பட்ட அஸ்திரங்களும் மந்திர சக்தி பொருந்தியவை. அவற்றின் பிரமிக்கத் தக்க செய்கைகள் அதுவரையில் யாரும் கண்டதில்லை. ராவணனுடைய அஸ்திரங்களின் வேலையைக் கண்டு ராமன் மிக வியந்தான். இருவரும் ஒன்றுக்கு மேல் ஒன்ருக மிக சக்தி வாய்ந்த அஸ்திரங்களைப் பிரயோகித்தார்கள். அஸ்திரங்களின் ஜ்வாலைகளினால் ஆகாயமெல்லாம் பல சூரியன்கள் சேர்ந்தாற் போல் பிரகாசித்த மாதிரி ஜோதி உண்டாயிற்று.

ராவணனுடைய சகல அங்கங்களையும் பாணங்களால் ராமன் துளைத்தான். ஆயினும் யுத்தம் முடிவு பெறவில்லை.

பிறகு லக்ஷ்மணனும் விபீஷணனும் ராவணனைத் தாக்கினர்கள். ராவணன் தன் தம்பியைக் கொல்ல மிக கோபத்துடன் ஒரு சக்தி ஆயுதத்தை வீசியெறிந்தான். அது விபீஷணன் மீது விழுவதை லக்ஷ்மணன் ஒரு பாணத்தால் தடுத்து விட்டான். அது துண்டிக்கப்பட்டு எரியும் கொள்ளிக் கட்டை போல் பூமியில் விழுந்தது. மறுபடியும் ஒரு சக்தியை ராவணன் விபீஷணன் மேல் வீசினன். அதையும் லக்ஷ்மணன் பாணத்தால் தடுத்து விட்டான். அதன்பேரில் ராவணன், லக்ஷ்மணன் மீது ஒரு சக்தி ஆயுதத்தை 'இதோ செத்தாய்' என்று வீசினன். அந்த சக்தியின் தாக்குதலினல் லக்ஷ்மணன் பூமியில் பிரக்ஞையிழந்து விழுந்தான். ஆனால் உயிர் போகவில்லை.

இதைக் கவனிக்காமல் ராமன் ராவணனை மிக பலமாகத் தாக்கிக் கொண்டேயிருந்தான். அவ்விருவருக்கும் யுத்தம் நடந்துகொண்டிருக்கும் போது வானர வீரர்கள் யோசித்து லக்ஷ்மணனுடைய உயிரைக் காப்பாற்றுவதற்காக ஆஞ்சனேயனை ஓஷதி மலைக்கு அனுப்பினர்கள். அப்படியே ஹனுமான் இரண்டாம் தடவை வடக்கே ஆகாயத்தில் தாவிச் சென்று ஓஷதிகளைத் தேட அவகாசமில்லையென்று மலையையே தூக்கிக் கொண்டு திரும்பி வந்தான். ஓஷதிகளைப் பிரயோகம் செய்த பிறகு லக்ஷ்மணன் சௌஸ்தப்பட்டு எழுந்து யுத்தத்தில் மறுபடியும் கலந்து கொண்டான்.

இதற்குள் இந்திரனுடைய தேரை மாலதி யுத்த பூமிக்கு ராமனுக்காகக் கொண்டு வந்து சேர்த்தான்.

“தேவராஜன் தங்களுக்காக அனுப்பியிருக்கிறன். தேரில் ஏறுவீராக! தேவர்களுக்குச் சத்துருவான ராவணனை வதம் செய்வீராக!” என்றுன் இந்திரனுடைய சாரதி. ராமனும் ரதத்தை வலம் செய்து நமஸ்கரித்து விட்டு ஏறினன்.

பிறகு அற்புத யுத்தம் நடந்தது. ராவணன் மிகவும் அடிபட்டு மனம் தளர்ந்து மயக்கமாக இருந்தான். இதைக் கண்ட அவன் சாரதி மெதுவாகத் தேரை யுத்த பூமியிலிருந்து வெளியே நடத்திக்கொண்டு போனன்.

கொஞ்ச நேரத்தில் ராவணன் மயக்கம் தெளிந்து, “ஏன் தேரை யுத்த பூமியை விட்டுக் கொண்டு வந்தாய்?” என்று சாரதியைக் கோபித்து மறுபடி திரும்பச் சொல்லி ராமனுடைய தேர் முன் நின்றான். மறுபடியும் கோர யுத்தம் ஆரம்பித்தது.

அஸ்திரத்துக்குப் பிரதியஸ்திரம் செலுத்திக் கொண்டு, இருவரும் அதுவரையில் யாரும் கண்டிராத அற்புத முறையில் ரதங்களைச் செலுத்தி நீண்ட நேரம் யுத்தம் நடத்தினர்கள். சேனையிலிருந்த வீரர்கள் பிரமித்துப் போய் அப்படியே பார்த்துக்கொண்டு நின்றார்கள்.

இதைக் கவனித்து வந்த சாரதி மாலதி ராமனுக்கு மெதுவாகச் சொன்ஞன்: “அரக்கனுடைய விநாச காலம் நெருங்கி விட்டது. தாமதித்துக் கொண்டிருப்பது ஏன்? பிரம்மாஸ்திரத்தை மறந்து விட்டீரா?”

இவ்வாறு மாலதி சொன்னதும் ராமன் அந்த திவ்யாஸ்திரத்தை உரிய மந்திரத்தைச் சொல்லிச் செலுத்திவிட்டான். அது வரையில் எத்தனையோ தடவை அரக்கனுடைய தலைகள் அறுபட்டாலும் புதிய தலைகள் முளைத்துக் கொண்டே வந்தன. பிரம்மாஸ்திரமானது ஜ்வாலை விட்டுக் கொண்டு, ராவணனை நோக்கிச் சென்று, அரக்கனுடைய மார்பைத் துளைத்தது. லங்கேசனுடைய கையிலிருந்த வில் கீழே நழுவி விழுந்தது. அரக்கன் ரதத்திலிருந்து கீழே விழுந்தான். தரையில் உயிரற்றுக் கிடந்தான்.

தேவ துந்துபிகள் முழங்கின; ஆகாயத்திலிருந்து புஷ்பமாரி பெய்தது. ராகவனையும் அவனுடைய ரதத்தையும் புஷ்பக் குவியல் மறைத்து விட்டது. லக்ஷ்மணன், விபீஷணன், ஜாம்பவான் முதலிய வீரர்கள் சூழ்ந்து கொண்டு ராமனைப் பூஜித்து ஆனந்தத்தில் மூழ்கினார்கள்.

விபீஷணன் உயிரற்றுக் கிடக்கிற அண்ணனைப் பார்த்து "ஹா வீரனே, அற்புத செயல்களைச் செய்தவனே, சகல ஸ்ரீ சாஸ்திரங்களையும் படித்து அறிவு பெற்றவனே! வீர விக்ராந்த விக்யாத விநீதநய கோவிதனே! வீழ்த்தப்பட்டு இன்று இரு புஜங்களையும் நீட்டிப் பரப்பி உயிர் துறந்து தரையில் கிடக்கிறாயே!" என்றான். அண்ணன் மரணத்துக்குத் தானே வேலை செய்தான். ஆனபோதிலும், செத்துக் கிடந்த அண்ணனைப் பார்க்கும்போது அந்தச் சந்தர்ப்பத்தில் சமீபத்தில் நடந்ததெல்லாம் மறந்துபோய், பழைய வாசனையும் வாழ்க்கை நினைவுகளும் தோன்றி, ரத்த பாசத்தின் பயனாகத் துக்கம் உண்டானது சகஜம்.

"ஆணவத்தால் மதியிழந்து துராலோசனை சொன்னவர்களால் சூழப்பட்டு நான் சொன்னதை நீ புறக்கணித்தாய். என்ன விளையும் என்று நான் சொன்னேனோ அதுவே நடந்து விட்டது! செய்த பெருந் தவறுகளின் பயனை அடைந்து விட்டாய். மதம் சொறியும் யானை வீழ்த்தப்பட்டுக் கிடப்பது போல் மண்ணில் கிடக்கிறாயே, சூரர்களுக்குள் மகா சூரனாயிருந்த ராக்ஷசேந்திரா!" என்றான்.

இவ்வாறு துக்கப்பட்டுக் கொண்டிருந்த விபீஷணனைப் பார்த்த ராமன் மெதுவாகப் பேசலானான்.

"மகா வீரனைப் போல் யுத்தம் செய்தான். தன் சௌரியத்தைப் பூரணமாகக் காட்டி விட்டு உயிர் நீத்தான். இத்தகைய மரணம் மேலான மரணம். இதற்குத் துக்கப்படலாகாது. போரில் புறங்காட்டாமல் இறப்பது வீரர்களுக்கு உண்டாகக் கூடிய முடிவு அல்லவா? வெற்றியோ மரணமோ எதுவாயினும் சரியே என்றல்லவோ வீரர்கள் யுத்தத்தில் இறங்குகிறார்கள். வீர சுவர்க்கத்தை ராவணன் அடைந்தான் என்பதில் சந்தேகமில்லை. மேல் நடக்க வேண்டிய காரியத்தைத் தம்பியாகிய நீர் நடத்துவீர். உயிர் நீத்த பின் பகை என்பது தீர்ந்து விட்டது. லங்கேசனுக்கு உத்தரகிரியைகளை விரோதியாயிருந்த நானே செய்யலாம். உம்முடைய சகோதரன் எனக்கும் சகோதரனே ஆவான் அல்லவா?" என்று ராமன் சொல்லி விபீஷணனுடைய மனத்திலுண்டான குழப்பங்களை அகற்றி, ராவணனுடைய உத்தம கதிக்காகச் செய்ய வேண்டிய கிரியைகளை நடத்தும்படியாகச் சொன்னான்.



ராவணனுடைய அந்தப்புர ஸ்திரீகள் வந்தார்கள். அவர்களுக்குப் பின் சோகமே வடிவம் எடுத்தது போல் வந்தாள் பட்ட மகிஷியும் ராவணேசுவரனுடைய மிகப் பிரிய மனைவியுமான மண்டோதரி. அழகிகளுக்குள் அழகியான இவள் தரையில் விழுந்து கிடந்த தன் புருஷனைக் கண்டதும் 'ஓ!' என்று கதறி அவனை அணைத்துக் கொண்டு புரண்டாள்.

“உமக்குக் கோபம் வந்தால் இந்திரனும் எதிரில் நிற்கமாட்டானே. தேவரிஷி கந்தர்வர்கள் எவருமே உம்மைக் கண்டு நடுங்கி எட்டுத் திசையிலும் ஓடுவார்களே, ஒரு மானிடனால் தோல்வியடைந்து வீழ்த்தப்பட்டீரே, உமக்குக் கோபம் வரவில்லையா? காட்டில் திரிந்து வந்த ஒரு மானிடன் வீழ்த்தி விட்டானே! இது எனக்கு ஒன்றும் விளங்க வில்லையே! மூன்று லோகங்களிலும் பரவிய உம்முடைய வீர பராக்கிரமம் இதை எப்படிப் பொறுத்தது? ஐயனே! நான் முந்தியே சொன்னேன் அல்லவா? இந்த ராமன் மானிடன் அல்ல. இந்திரனும் அக்கினி தேவனும் யமனும்கூட உம்மை வெல்ல முடியாது. இவன் ஆதி இடை அந்தம் அற்ற மகா விஷ்ணுவே, மனித உடல் எடுத்து அவதரித்து வந்தவன். இவன் ஜனஸ்தானத்தில் உம்முடைய சகோதரன் கரனைத் தரையில் நின்று வதம் செய்தபோதே நான் சொன்னேன் அல்லவா? யாரும் பிரவேசிக்க முடியாத இந்த லங்கைக்குள் ஹனுமான் புகுந்து நகரத்தை நாசம் செய்த போதே எனக்குத் தெரிந்து விட்டது. 'இந்த விரோதத்தைக் கட்டிக் கொள்ளாதீர்' என்று நான் சொன்னதை நீர் கேட்க வில்லை. மகா பதிவிரதையான சீதையின் மேல் ஏன் மோகங் கொண்டீர்? என்னைவிட அவளுடைய வடிவழகு எவ்விதத்தில் மேலானது என்று மதியிழந்தீர்? தனியாக இருந்த அவளை எடுத்து வந்தது மகா பாவம் ஆயிற்றே. அதைச் செய்து விட்டு இப்போது அதன் பயனை அனுபவிக்கிறீரே! அழிந்து போகவே மதியிழந்தீர். விபீஷணன் அல்லவோ நல்ல பேறு அடைந்து விட்டான். நீரோ பிரேதமாகக் கிடக்கிறீர். காலன் அல்லவோ சீதையின் வடிவு கொண்டு உம்மை இழுத்துச் சென்று இந்த விநாசத்தில் தள்ளி விட்டான். சீதையும் ராமனும் இப்போது சந்தோஷமாகக் கூடி விட்டார்கள். என்னையும் உம்முடைய குலத்தையும் அனைவரையும் துக்க சாகரத்தில் தள்ளிவிட்டுப் போய் விட்டீரே. ஐயோ! உம்முடைய அழகிய திருமேனி இந்த நிலைமையிலிருக்கிறதே! ராம பாணங்களால் துளைக்கப்பட்டு ரத்தச் சேறும் புழுதியும் படிந்து பிரகாச மிழந்து கிடக்கிறீரே! என்னால் பொறுக்க முடிய வில்லையே! நான் என்ன செய்வேன்! லங்கேசன் என் புருஷன், இந்திரனை வென்றவன் என் மகன், எனக்கு என்ன குறை என்று கர்வங்கொண்டு மோசம் போனேனே! ஒரு வார்த்தை பேச மாட்டீரா? என்னை விதவையாகச் செய்து விட்டீரே! நான்தான் கெட்டேன்!”

இவ்வாறு பிரலாபித்துக் கொண்டு மண்டோதரி ராவணனுடைய பிரேதத்தின் மேல் விழுந்து பிரக்ஞையற்றுக் கிடந்தாள்.



# ஜனக் ஜனக் பாயல் பாஜே






சினிமா உலகிலே அதிசயம் விளைவிப்பதையே இதுவரை தமது வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்ட திரு வி. சாந்தாராம் மீண்டும் ஓர் பேரதிசயத்தை விளைவித்திருக்கிறார்.

ஆம், அவர் சமீபத்தில் தமது ராஜ்கமல் ஸ்டுடியோவில் எடுத்து வெளியிட்ட "ஜனக் ஜனக் பாயல் பாஜே" என்ற அரிய வர்ணப் பட அற்புதத்தைத் தான் குறிப்பிடுகிறேன்.

முதலில் பெயரே புதுமாதிரியாக ஒலிக்கிறதல்லவா? அது பாதச் சலங்கையின் ஒலியிலிருந்து பிறந்த பெயர். "பாதச் சலங்கை 'ஜனக்' 'ஜனக்' என்று ஒலித்துக் கொண்டிருக்கட்டும்" என்பதே பொருள்.

ஆணும் பெண்ணும் சேர்ந்து நாட்டியமாடுவதும் ஒரு சம்பிரதாயம்.

திரு வி. சாந்தாராம் படம் என்றால், அதில் ஏதாகிலும் ஒரு முக்கியமான பிரச்னை ஆராயப்பட்டிருக்கும் என்பது யாவரும் அறிந்த விஷயம். வரதட்சிணைக் கொடுமை, இளம் பெண்களை முதியவர்களுக்கு மணம் புரிதல், தொழிலாளி - முதலாளி பிரச்னை, இப்படிப் பல பிரச்னைகளை அடிப்படையாகக் கொண்டு இதுவரை பல படங்கள் எடுத்து வெளியிட்டிருக்கிறார். நாட்டியமே முக்கியமாக அமைந்த இந்த வர்ணப் படத்திலும், "கலையா? காதலா?" என்ற பிரச்னையை அடிப்படையாகக் கொண்டு ஆராய்ந்திருக்கிறார் திரு வி. சாந்தாராம்.

இந்தப் படத்தைப் பார்ப்பவர்கள், 'ஆம்! அப்படியே என்றும் ஒலித்துக் கொண்டிருக்கச் செய்து விட்டார்' என்றுதான் கூறுவார்கள். அப்படி நாட்டியக் கலைக்கு உயர்வு தேடித் தந்துவிட்டார்.

நாட்டியக் கலையை ஆதாரமாகக் கொண்டு எடுக்கப்பட்ட இப்படம் 'கதக்' என்ற நாட்டிய முறையின் சிறப்பியல்புகளையெல்லாம் எடுத்துக் காட்டுகிறது. 'கதக்' என்பது தான விந்யாசங்கள் நுட்பமாக அமைந்த அற்புத நாட்டிய முறைகளில் ஒருவகை. இந்த நாட்டியத்தில்



நீலாவாக நடித்த ஸந்தியா

"பாரத நடராஜ்" என்பது நாட்டியக் கலையில் பெறற்கரிய ஓர் உயரிய பட்டம். அந்தப் பட்டத்தைத் தன் மகன் கிரிதர் பெற வேண்டும், அந்த அளவுக்கு அவன் நாட்டியக் கலை சிறப்படைய வேண்டும் என்ற லட்சியத்தோடு வாழ்கிறார் கதக் நடன குரு. இருபது வருஷம் கிரிதருக்குப் பயிற்சி அளிக்கப்படுகிறது. சிறந்த நடனக் கலைஞனாக விளங்குகிறான் கிரிதர்.

இந்தக் குருவிடம் பாடம் கற்க வேண்டும், நடனம் பயிலவேண்டும் என்ற ஆசையுடன் வருகிறாள் நடன மங்கை



திரு நாதமுனி நாயுடு. திரு வி. சாந்தாராம்
திரு பி. என். ரெட்டி

நீலா. நீலாவைச் சிஷ்யையாக ஏற்றுக் கொள்ள முதலில் தயங்கிய குரு, பின் தன் மகனுடன் சேர்ந்து நடனமாடத் தக்க துணை யாவாள் என்று தீர்மானித்து ஒரு நிபந்தனையின் மீது ஏற்கச் சம்மதிக்கிறார். அதாவது நடனம் பயிலும் போது தனது சித்தனை முழுதும் கலையினிடத்தேயே இருக்க வேண்டும், மற்ற ஆசாபாசங்களுக்கு இடம் தரக் கூடாது என்று உறுதி மொழி வாங்கிக் கொள்ளுகிறார். ஆயினும் வேறு வகையாகவே நிகழ்ச்சிகள் மலர்கின்றன. கிரிதருக்கும் நீலாவுக்கும் நடனப் பயிற்சியுடன் காதலும் சேர்ந்து வளர்கிறது. தன் தனயன் லட்சியக் கலைஞன், அவன் வாழ்வில் காதலை நுழைய விட மாட்டான் என்று பெருமிதம் கொண்டிருந்த குரு பெரிதும் ஏமாற்றமடைகிறார்.

தன் பொருட்டுக் கிரிதர் கலைப் பட்டம் இழக்க நேரும் என்று உணர்ந்த மாத்திரத்தில் அவ்விடத்தை விட்டு வெளியேறுகிறாள் நீலா. பல துன்பங்களுக்கு ஆளாகிறாள். படம் வேகமாகச் செல்கிறது. கடைசியில், கலையிடம் தான் கொண்டுள்ள பற்று கிரிதரனும் அவன் தந்தையும் கொண்டுள்ள பற்றைவிடச் சிறந்தது என்பதை நிரூபிக்கிறாள். கலை வெற்றி பெறுகிறது. பிறகு காதலும் வெற்றி பெறுகிறது!

சங்கீதம் என்றால் மிக உயர்ந்த ஹிந்துஸ்தானி சங்கீதத்தைக் கேட்கிறோம். ஜனக் ஜனக்என்றபாட்டைப் பின்னணியில் அமீர் கான் அபாரமான முறையில் பாடியிருக்கிறார். மற்றப் பாடல்களும் பரிபூரணமாய் நம் நாட்டுப் பாணியில் அமைந்துள்ளன. மாதிரிக்குக்கூட ஒரு டப்பாப்பாட்டுஇல்லை.

நமது நேயர்களுக்கு ஓவியர் கனுதேசாய் நன்கு அறிமுகமானவர். அவருடையவண்ண ஓவியங்களையும் கைத்திறனையும் இப்படத்தில் வேண்டிய மட்டுக்கும் காணலாம்.

இயற்கைக் காட்சிகளை என்னவென்று சொல்வது! மைசூர், பிருந்தாவனத்தின் வண்ண வண்ண நீரோடைகளையும் வண்ண நீர் கொப்புளிக்கும் குழாய்களையும் செடிகளையும் புஷ்பங்களையும் பார்க்கப் பார்க்க உள்ளம் பரவசமடைகிறது. இதனிடையே ரதி மன்மத நடனம் மிகவும் அழகாகப் பொருந்தி விடுகிறது!

நடிகர்களைப் பற்றி ஒரு வார்த்தை. நீலாவாக நடிக்கும் ஸ்ரீமதி ஸந்தியா அற்புதமாக நடித்திருக்கிறார். அவர் நயனங்களும் புருவங்களும் உணர்ச்சிகளை மழையாகப் பொழிகின்றன. கிரிதராக நடித்திருக்கும் கோபி கிருஷ்ணாவின் அற்புத நடனத்தைப் பார்த்தவர்களுக்கே பாரதியார் கூறியிருக்கும் 'விசையுறு பந்தினை'ப் போன்ற உடல் என்பதின் பொருள் விளங்கும். குருவாக நடித்துள்ள தாந்தே அபாரமாக நடித்திருக்கிறார்.

இவை யெல்லாவற்றையும் விட பாரத மக்களின் அன்றாட வாழ்க்கையில் உள்ள வர்ண அழகுகளை யெல்லாம் இந்தப் படத்தில் காண்கிறோம். வர்ணக் கோலங்களின் அழகுகளையும், இன்ப நாதம் புரியும் கை வளையல்களின் வர்ண வேறுபாடுகளையும், நடன அலங்கார ஆடைகளின் வர்ண விசித்திரங்களையும், பானைகளில் வரையப் படும் சித்திர விசித்திரங்களையும், சேலைகளின் அழகிய வர்ணக் கரைகளையும் இப்படத்தில் பார்க்கப் பார்க்க உள்ளம் குதூகலமடைகிறது. நமது வாழ்க்கையிலா இவ்வளவு வர்ண அழகுகள் இருக்கின்றன என்ற பிரமிப்பு ஏற்படுகிறது.

இந்தப் படம் சென்னையில் இப்பொழுது மிட்லண்டு, பிராட்வே ஆகிய இரண்டு தியேட்டர்களில் ஓடுகிறது. முதல் நாள் அன்று மாலை பிராட்வே டாக்கீஸ் முதலாளியான திரு நாதமுனி நாயுடு திரு வி. சாந்தாராம் அவர்களுக்கு ஒரு பாராட்டு விருந்து ஏற்பாடு செய்திருந்தார். இரவு பிராட்வே டாக்கீஸில் 9-30 மணிக் காட்சியின் போது திரு சாந்தாராமுக்கு ஒரு வாழ்த்துரை வாசித்தளித்தார்.

இதுகாறும் இந்தியாவில் எடுக்கப்பட்ட இரண்டொரு வர்ணப் படங்களும் மேல் நாட்டுத் தொழில் இயல் நுட்ப நிபுணர்களைக் கொண்டே எடுக்கப்பட்டுள்ளன. ஆனால் இந்தப் படம் ஒன்றுதான் மேல் நாட்டு நிபுணர்களின் உதவியின்றி முழுக்க முழுக்க இந்திய என்ஜினீயர்களைக் கொண்டே எடுக்கப்பட்டிருக்கிறது. இந்த வர்ணப் படத்தைப் பார்த்த மேனாட்டு படக் கலைத் தொழில் நிபுணர்கள் பெரிதும் வியந்து பாராட்டினார்களாம்.

இப்படம் கலைத்துறையிலும் தொழில் துறையிலும் ஒரு அபூர்வமான சாதனை. இச்சாதனையைப் பற்றிப் பாரத நாடே பெருமைப்படலாம்!




அக்டோபர் 14-ந் தேதியிலிருந்து

தென்னடெங்கும் திரையிடப்படுகிறது

# வட இந்திய யாத்திரை 13

இந்தக் காலத்தில் என்னென்னவோ அதிசயங்கள் எல்லாம் நடக்கின்றன. வர வர மாமியார்கள் மிக மிக நல்லவர்களாகிக் கொண்டு வருகிறார்கள். பெரிய பெரிய முதலாளிகள் சாதாரணத் தொழிலாளர்களுடன் தோளோடு தோள் நின்று பாடுபடுகிறார்கள். பெரிய சாதியார் என்று சொல்லிக் கொள்பவர்கள் சின்ன சாதியாருடன் மனம் உவந்து கலப்பு மணம் செய்து கொள்கிறார்கள். அதுபோலவே மருமக்கள்மார்களும் மாமியார்களிடம் அதிக மரியாதை வைத்திருக்கிறார்கள் ; அன்பாக நடந்து கொள்கிறார்கள். தொழிலாளர்கள் தங்கள் கடமையை உணர்ந்து உற்சாகத்துடன் வேலை செய்கிறார்கள். நாம் தாழ்ந்த சாதியைச் சேர்ந்தவர்கள் என்ற தாழ்வு மனப்பான்மையின்றி மக்கள் தலை நிமிர்ந்து நடக்க ஆரம்பித்து விட்டார்கள்.

அதாவது லட்சுமியும் சரஸ்வதியும் ஒரு இடத்தில் சேர்ந்து வசிக்கத் தொடங்கி விட்டார்கள். கலைமகளும் திருமகளும் கைகோத்துக் கொண்டு நடக்க ஆரம்பித்து விட்டார்கள். சரஸ்வதி இருக்கும் இடத்தில்தான் லட்சுமி இருப்பேன் என்று அழுத்தமாகச் சொல்ல ஆரம்பித்து விட்டாள்.

கல்வியிலும் கலை வளத்திலும் சிறந்து விளங்கும் ஒரு தேசம்தான் பொருள் வளத்திலும் சிறந்து விளங்க முடியும்.

இந்தியா தேசத்தில் இதுவரையில் தொழிலுக்கும் ஆராய்ச்சிக்கும் அவ்வளவு முக்கியத்துவம் அளிக்கப்பட்டு வந்ததில்லை. இப்போது நமது சுதந்திர சர்க்கார் தேசப் புனருத்தாரணத்துக்கு வேண்டிய முயற்சிகள் செய்து வருகிறார்கள். அதற்கு வேண்டிய பலமான அஸ்திவாரத்தை அமைத்து வருகிறார்கள். கல்வியுடன் கைத்தொழிலும் கலந்து ஓங்கி வளருவதற்கு வேண்டிய ஏற்பாடு செய்து வருகிறார்கள்.

அப்படிக் கல்வியும் தொழிலும் கலந்து உறவாடும் அதிசயத் தொழிற்சாலைக்குள்தான் நாம் இப்போது நிற்கிறோம். டேராடூன் வன ஆராய்ச்சிக் கழகத்தின் இன்னொரு முக்கிய [illegible] அங்கமான இந்த அபூர்வ ஆராய்ச்சித் தொழிற்சாலைக்குள் செல்வோம், வாருங்கள்.

* * *

இது தொழிற்சாலை மட்டும் அல்ல. சிறந்த ஆராய்ச்சிச் சாலையாகவும் இருக்கிறது. மரங்களைப் பலவிதமாக ஆராய்ச்சி செய்கிறார்கள். பிறகு அங்குள்ள தொழிற்சாலையில் ஆராய்ச்சி செய்த மரங்களைக் கொண்டு பலவிதமான சாமான்கள் செய்கிறார்கள்.

இங்கு 'பிளை உட்' என்று சொல்லும் மெல்லிதான பலகை செய்யும் அதிசய இயந்திரம் இருக்கிறது. சால் என்ற ஒரு வகை மரத்தை வேண்டிய அளவுக்குத் துண்டு போட்டுக் கொள்கிறார்கள். துண்டு போட்ட மரங்களை அந்த இயந்திரத்தின் ஒரு மூலையில் வைக்கிறார்கள். இயந்திரம் ஓட ஆரம்பிக்கிறது. மரம் சுழல ஆரம்பிக்கிறது. மரத்தை ஒட்டினாற் போல் இருக்கும் பெரிய கத்தியின் உதவியினால் அந்த மரத்தில் இருந்து காகிதம் போல மரப் பலகைகள் சுருள் சுருளாக உரித்து எடுக்கப்படுகின்றன. அவ்வாறு எடுத்த பலகைகளை நமக்கு எந்த அளவு வேண்டுமோ அந்த அளவுக்கு வெட்டிக் கொள்கிறார்கள். பின்னர் அந்தப் பலகைகளைக் குறுக்கும் நெடுக்குமாகத் திருப்பி வைத்து ஒட்டி விடுகிறார்கள். இவ்வாறு ஒட்டிய பிறகு அது பலம் பொருந்திய 'பிளை உட்' பலகையாகி விடுகிறது. அதையே எந்த மாதிரி உருவத்துக்கும் மாற்றுவதற்கு வசதியாக வளைத்துத் திருத்துவதற்கான இயந்திரங்களும் இருக்கின்றன.

இன்னொரு செயற்கை மரம்,—மரத்தூள். சாதாரண உபயோகமில்லாத மரம் முதலியவைகளைக் கொண்டு தயார் செய்வது. மரத்தூளை வஜ்ஜிரமும் இன்னும் சில ரசாயனக் கலவையுடனும் கூடிய குழம்புடன் கலந்து விடுகிறார்கள். மரத் தூள்கள் உருவமில்லாத மரங்களாக மாறி விடுகின்றன. அந்த மரத்தைக்





கொண்டு போய் நவீன முறையில் அமைக்கப்பட்டுள்ள ஒரு இயந்திரத்தில் கொடுக்கிறார்கள். அந்த இயந்திரம் பல ஆயிரம் டன் கனம் உள்ள பெரிய பட்டறைக்கு மத்தியில் மேற்படி செயற்கை மரத்தை வைத்து அமுக்குகிறது. அப்படி அமுக்கும்போது வஜ்ரத்துடன் கலந்த மரத்தூள் நன்றாக அமுக்கப்பட்டு, இறுகி, இறுகி மேலும் இறுகிப் பலம் உள்ள மரமாக உருவாகிறது. அப்படி உருவான மரத்தை நமக்கு வேண்டிய காரியங்களுக்கு ஏற்ற வண்ணம் என்னமாதிரிகளில் செய்து கொள்ள வேண்டுமோ அவ்வாறு செய்கிறார்கள். அப்படிச் செய்யப்பட்ட மரத்தை விஞ்ஞான முறைப்படி செய்துள்ள ஒரு குளைக்குள் வைத்துப் பாடம் செய்து அதற்கு ஒரு புது சக்தியைக் கொடுக்கிறார்கள். பிறகு அந்த மரத்தைக் கறையான் முதலிய பூச்சிகள் அணுக முடியாமல் ரஸாயன முறையில் தயாரிக்கப்பட்ட இன்னொரு அறையில் அடைத்து அந்த மரத்துக்குள் மருந்தைச் செலுத்தி மிக உயர்ந்த மரமாக மாற்றி விடுகிறார்கள். இப்படிப் பல முறைகளில் பலப்படுத்தப்பட்ட மரம் உயர்ந்த ஜாதி மரங்களை விட உயர்வாக இருக்கிறது. இதேமுறையைச் சாதாரண உபயோகமில்லாத மரங்களுக்கும் செய்து அதையும் உயர்ந்த ஜாதி மரமாக்கி விடுகிறார்கள்.

மரத்தூள் முதலியவைகளைக் கொண்டு செய்த செயற்கை மரத்தில் இயற்கையான மரத்தில் இருக்கும் கணு, வேறு பலமாதிரி தொல்லைகள் இருப்பதில்லை. மரத்தின் வளர்ச்சி ஓட்டம் காரணமாக ஏற்பட்டிருக்கும் இடைவெடிப்புகளும் இருப்பதில்லை. அதனால் இந்தச் செயற்கை மரம் இயற்கை மரத்தைவிட அழகாகவும் வேலைகளுக்குச் சௌகர்யமாகவும் இருக்கிறது. கிரிக்கட் மட்டைகள், ரயில் பெட்டிகள், கப்பல், தந்தி மரங்கள், விளையாட்டுச் சாமான்கள் முதலியவைகளுக்கு இச்செயற்கை மரம் மிகவும் உபயோகமாக இருக்கிறதாம்.

சாதாரண மூங்கிலைக் கூட மேலே கூறப்பட்டிருக்கும் விஞ்ஞான முறையில் பலப்படுத்திவிட்டால் வீடு கட்டுதல் முதலிய வேலைகளுக்கு மிகவும் உபயோகமாக இருக்குமாம். பல வருஷங்கள் ஆனாலும் மூங்கில் உளுத்துப் போகாமல் மிகுந்த உறுதியாக இருக்கும். இந்த முறையை வெறும் ஆராய்ச்சி மூலம் வெற்றி பெற்ற திருப்தியுடன் நில்லாமல் ஏழை எளிய மக்களுக்குச் சுலபமாகக் கிடைக்கும் வகையில் ஏற்பாடு செய்தால்தான் நல்லது. அவ்வாறு செய்யாமல் இந்த மாதிரி அதிசய முறைகளை ஆராய்ந்து புத்தகம் போட்டு விட்டால் போதுமா! ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவுமா! ஆகவே மரங்களைப் பலப்படுத்தி வேலைகளுக்கு உபயோகிக்கும் நவீன முறையைத் தென்னாட்டில் அனுசரிப்பதற்கு வேண்டிய வசதிகளுக்கு ஏற்பாடு செய்தால் பொது மக்களுக்கு மிகவும் உபயோகமாக இருக்கும். மூங்கிலைக் கொண்டு வீடு கட்டிக் கொள்பவர்களுக்குப் பேருதவியாக இருக்கும்.

இன்னும் மூங்கில் பிளாச்சுகளைக் கொண்டு 'பிளேவுட்' தயாரித்து அதை உபயோகித்து மேஜை, நாற்காலி, கட்டில் முதலிய பலவித சாமான்களைத் தயாரித்து வைத்திருக்கிறார்கள். இது இதர மரங்களால் செய்த சாமான்களை விட உறுதியாகவும், நீண்ட நாள் உழைக்கக் கூடியதாகவும் இருக்கிறது. மிகக் குறைந்த செலவில் எல்லா இடங்களிலும் தயாரித்துக் கொள்ளவும் முடியும்! ஆனால் இந்த முறைகள் எல்லாம் எப்பொழுது பொதுஜன உபயோகத்துக்குச் சுலபமாகக் கிடைக்க வழி செய்கிறோமோ அப்பொழுதுதானே இந்த ஆராய்ச்சி முறைகளில் மக்கள் பலன் அடைய முடியும்.








வயதானவர்களும் வியாதியஸ்தர்களும் ஏறிக் கொள்ளும் விசித்திரமான பல்லக்கு.

இருந்தாலும் இந்த மாதிரி ஆராய்ச்சிகளைப் பார்க்கும்போது "என்னே ஆராய்ச்சியின் அற்புதம்! அறிவின் அதிசய வளர்ச்சி!" என்று வியக்கத்தான் வேண்டியிருக்கிறது.

இன்னொரு அதிசயத்தையும் பார்த்தோம். மரத்தை இரும்பைவிட பலம் பொருந்திய உலோகம் போல மாற்றி விடுகிறார்கள். மரத்தைப் பல ஆயிரம் டன் நிறையுள்ள இயந்திரத்தில் வைத்து அமுக்கி அமுக்கி அதை விஞ்ஞான முறைப்படி பலப்படுத்திக் கடைசியில் இரும்பைவிட பலம் பொருந்தியதாகச் செய்து விடுகிறார்கள். அப்படிச் செய்த மரத்தைக் கொண்டு பெரிய பெரிய இயந்திரங்களுக்கெல்லாம் பல் சக்கரங்கள் தயாரித்து வருகிறார்கள். இரும்பின் உதவியில்லாமலே இரும்பைவிட உறுதி கொண்டதாகவும் நீண்டநாள் உழைக்கக் கூடியதாகவும் மரத்தைத் தயாராக்கும் அதிசயத்தைப் பார்த்தோம்.

இவ்வாறு மரங்களைக் கொண்டு என்னென்ன செய்யலாமோ அவற்றை யெல்லாம் செய்வதற்கு வேண்டிய அபூர்வமான பல ஆராய்ச்சிகள் அங்கு நடைபெறுகின்றன. இந்த ஆராய்ச்சிகளை எல்லாம் பார்த்து விட்டு இன்னொரு பகுதிக்குச் சென்றோம்.

அங்கு மூங்கில், கரும்புச் சக்கைகள், மரத்தூள்கள் முதலியவைகளைக் கொண்டு காகிதம் தயார் செய்யும் வித்தையைப் பார்த்தோம். இந்த ஆராய்ச்சிச் சாலையின் உதவியால் வெகு விரைவில் இந்தியாவுக்கு வேண்டிய காகிதங்களை யெல்லாம் வெளி நாட்டிலிருந்து இறக்குமதி செய்யாமல் நாமே தயாரித்துக் கொள்ளலாம் என்று அங்குள்ள நிபுணர்கள் கூறுகின்றனர். காகித ஆராய்ச்சிச் சாலையையும், அங்கு காகிதங்கள் தயாரித்து வைத்திருக்கும் அதிசயத்தையும் நேரில் பார்த்தபோது நிபுணர்கள் கூறுவதை நம்ப முடிகிறது. நமக்கு வேண்டிய எல்லா ரகமான காகிதங்களையும் வெளிநாட்டாரின் உதவி யில்லாமல் வெகு விரைவில் பூர்த்தி செய்து கொள்ளலாம்.

## தாவரங்களின் சொர்க்கம்!

காகிதம் செய்யும் தொழிற்கூடத்தை விட்டு வெளியில் வந்தோம். காட்டிலாகா அதிகாரி அருகில் உள்ள வனத்துக்குள் அழைத்துச் சென்றார். பெரிய விஸ்தாரமான தோட்டம். நீளத்திலும் அகலத்திலும் பரந்து கிடந்தது. உலகத்தில் எத்தனை விதமான மரங்களும், செடிகளும், கொடிகளும் உண்டோ அத்தனை வித மரங்களும், செடிகளும், கொடிகளும் இங்கே வைத்துப் பயிர் செய்கிறார்கள். இதைத் தாவர வர்க்க ஆராய்ச்சிக்காரர்களின் சொர்க்கம் என்று சொன்னாலும்கூடத் தவறில்லை.

இந்தப் பெரிய தோட்டம் முழுமையும் சுற்றிப் பார்க்க முடியவில்லை. அதற்குள் அருகிலிருந்த காட்டுக்குள் புகுந்து சென்றோம்.

இதுவரையில் மனிதன் தன் முயற்சியினால் செய்து வந்த அதிசயங்களைப் பார்த்துவிட்டு இறுமாந்து இருந்தோம். இப்பொழுது காட்டுக்குள் சென்று மரங்களையும், அவற்றின் இலைகளையும், அவற்றின் விதம் விதமான நிறத்தையும் பார்த்தவுடன் "இது என்ன விந்தையோ!" என்று வியக்கும்படி இருந்தன.

எல்லாம் மரங்கள் தான். எல்லா இலைகளும் பச்சை நிறம்தான்! ஆனால் அந்தப் பச்சை நிறத்தில்தான் எத்தனை விதங்கள்!

இந்தச் சமயத்தில் ரஸிகமணி டி. கே. ஸி. அவர்களின் நினைவு வந்தது. கம்பன் காட்டைப் பார்த்து அனுபவித்துப் பாடிய பாடலுக்கு அவர்கள் சொல்லும் அருமையான விளக்கமும் மனத்தில் தோன்றியது. கம்பன் பாடலும் ரஸிகமணி அவர்களின் விளக்கமும் எவ்வளவு அனுபவபூர்வமான உண்மைகள் என்பதைக் காட்டுக்குள்ளே இருந்து அனுபவிக்கும்போதுதான் உணர்ந்து கொள்ள முடிந்தது. அப்பொழுது ஏற்பட்ட உணர்ச்சிகளை எப்படி எழுதிக் காட்டுவது என்று தெரியவில்லை.

"மறைகளை மறைந்து போய்
வனத்துள் வைகுவான்!"

என்று கம்பன் காட்டுக்குள் சென்று தன் அனுபவத்தைப் பாடியிருக்கிறான். அதை அப்படியே உணர்ந்து அனுபவித்த ரஸிகமணியின் விளக்க உரையைக் கேளுங்கள்:

வேத நூல்களைப் படித்துத் தெரிந்து கொள்வது அவ்வளவு எளிதான காரியமல்ல. ஆனால் வேதங்களின் அர்த்தம் புரிந்தவுடன் "ஆகா! எனக்குக் கூட வேதத்தின் பொருள் தெரிந்துவிட்டதே" என்று ஆணவம் ஏற்பட்டுவிடும். ஆணவம் உண்டானதும் ஆண்டவன் அங்கிருந்து மறைந்து விடுகிறார்.

ஆனால் காட்டுக்குள்ளே சென்றால் மனிதன் "நான் செய்தேன்" என்ற ஆணவ உணர்ச்சிக்கே இடமிருப்பதில்லை. அங்கு எல்லாம் ஆண்டவன் படைப்பு. காட்டில்தான் மனிதனின் ஆணவம் ஒடுங்கி ஆண்டவன் தத்துவத்தை உணர்ந்து தலை வணங்க முடிகிறது.

காட்டில் தான் எங்குமே காண முடியாத கடவுளைக் காண முடியும் என்பது எவ்வளவு

# ப்ளிட்டை உபயோகித்து உங்கள் குடும்பத்தைப் பாதுகாயுங்கள்!



**1** வீட்டிலுள்ள பூச்சிகள் அனைத்தையும் கொல்லுகிறது.... ஒரு சில பூச்சிகளைத் தான் கொல்லும் என்றில்லை

பூரணப் பிரயோஜனத்தை உத்தேசித்து விஞ்ஞான முறைப்படி ப்ளிட்டில் ஆறு சக்தி வாய்ந்த பூச்சிகளைக் கொல்லும் மருந்துகள் சேர்க்கப்பட்டுள்ளன. வீட்டிலுள்ள பூச்சிகள் இதனுடைய சாவுக்கும் தன்மையிலிருந்து தப்பவே முடியாது!



**2** நீங்கள் செலவழிக்கும் ஒவ்வொரு அணுவுக்கும் அதிகமான பூச்சிகளைக் கொல்லுகிறது

ப்ளிட் தெளிக்கப்பட்ட பாகம் பலவாரங்களுக்கு பூச்சிகளின் உபத்திரவமற்றதாய் விளங்குகிறது. சிலர் ப்ளிட் உபயோகித்த பிறகு உங்களை பாதுகாத்துக் கொண்டே போகிறது. உங்கள் முழுக்குடும்பத்தின் தேக சுகத்தைப் ப்ளிட் கொண்டு காப்பாற்றவும்.




## மலேரியா, டைபாயிட், காலரா முதலிய பல வியாதிகளைக் கொண்டுவரும் பூச்சிகளை இது கொல்லுகிறது

ப்ளிட் தனிப்பட்ட ஒரே ஒரு பூச்சியைக் கொல்லும் மருந்தல்ல. அநேக பற்பல பூச்சிகளைக் கொல்லும் மருந்துகளின் ஒரு முழுச்சேர்க்கையாகும். இத்தகைய மருந்துகள் ஒன்றுசேர்ந்து அவை மற்றவைகளையும் விடவும் சக்தியுள்ளதாகச் செய்துகொள்ள உதவுகின்றன. இவ்விதமான ஒத்துழைப்பை செய்வதிலேயே ப்ளிட் மிகவும் வாய்க்கக்கூடிய பூச்சியைக் கொல்லும் மருந்துகளிலேயே மிகவும் சக்தி வாய்ந்ததாயும், சிக்கனமானதாயும் விளங்குகிறது.

ப்ளிட் மனிதர்களுக்கும் வீட்டில் வளர்க்கப்படும் பிராணிகளுக்கும் தீங்கு விளைவிக்காது. இன்றே ஒரு டின் வாங்குங்கள்—இது எவ்வளவு பலனுள்ளதென்பதை அறிய உங்களுக்கு ஆச்சரியமாயிருக்கும்.

## சிவப்பு, வெள்ளை, நீல நிறமும் கொண்ட டின்னில் கிடைக்கும்

ஸ்டாண்டர்ட்-வாக்குவம் ஆயில் கம்பெனி (கம்பெனி அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது)

அனுபவம் நிறைந்த வாக்கு என்பதைக் காட்டுக்குள் நின்று கொண்டிருக்கும் போதல்லவா நன்றாக உணர முடிந்தது.

* * *

உத்தரப்பிரதேசம்தான் இந்தியாவில் காடுகள் அதிகம் உள்ள பிரதேசம். அதனால் வன ஆராய்ச்சிக் கழகத்தை அங்கு ஆரம்பித்ததில் அதிசயமில்லை. இந்த வன ஆராய்ச்சிக் கழகத்தின் முதல் இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஒரு ஜெர்மானியர். உலகத்திலேயே காடுகள் ஆராய்ச்சியில் ஜெர்மானியர்கள்தான் சிறந்த நிபுணர்கள். அதனால் ஒரு ஜெர்மானியரைக் கொண்டு முதன் முதலாகத் திட்டம் வகுத்து இந்த வன ஆராய்ச்சிக் கழகத்தை வளர்ப்பதற்கு முயற்சி செய்திருக்கிறார்கள். அந்த ஜெர்மானியர் யார் தெரியுமா ! அடால்ப் ஹிட்லரின் பிரசித்திபெற்ற ராணுவ மந்திரியான வான்ரிப்பன் டிராப்பின் தந்தை. அவருடைய எண்ணெய் வர்ண ஓவியம் ஒன்றும் வன ஆராய்ச்சிக் கழகத்தை அலங்கரித்து வருகிறது ! ரிப்பன் டிராப் தந்தையின் சேவையை வன ஆராய்ச்சிக் கழகம் மறக்க முடியாதபடி மிகச் சிறந்த முறையில் சேவை செய்திருப்பதாக அங்குள்ள நிபுணர்கள் கூறினார்கள். ஆனாலும் இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி ஏற்படுவதற்கு முன்னமேயே அந்த ஜெர்மானிய நிபுணன் வந்து திட்டங்கள் வகுத்துக் காடுகளைக் காப்பாற்றுவதற்கு முன்னதாகவே, நமது தந்தையர்கள் இது போன்ற வன ஆராய்ச்சிக் கழகத்தை ஆரம்பித்திருந்தார்கள். அவர்கள் ஆரம்பித்து வளர்த்து வந்த வன ஆராய்ச்சி ஸ்தாபனம் ஒன்று அங்கு இருந்தது. அதைத்தான் இவ்வாறு நல்ல முறையில் வளர்த்திருக்கிறார்கள் என்ற விஷயத்தையும் தெரிந்து கொண்டோம்.

டேராடூன் வந்ததிலிருந்தே உடன் வந்த பல நிருபர்கள் மசூரியைப் பார்க்காமல் போகக் கூடாது என்று வற்புறுத்தினார்கள்.

அதனால் அவசரம் அவசரமாக வன ஆராய்ச்சிக் கழகத்தைச் சுற்றிப் பார்த்து விட்டு மசூரிக்குக் கிளம்பினோம்.

உத்தரப்பிரதேசத்தின் கோடைக்கால சுகவாசஸ்தலமான மசூரியைப் பார்க்காமல் உத்தரப்பிரதேசத்துக்கு வந்து என்ன பிரயோஜனம் ! கிளம்புங்கள், புகழ்பெற்ற சுகவாஸஸ்தலமான மசூரிக்குப் போய் வரலாம்.

## இதோ. மசூரி !

சாதாரண பருத்தித் துணிச் சட்டைகள் போட்டிருப்பவர்கள் எல்லாம் தயவு செய்து கம்பளிச் சட்டை எடுத்துப் போட்டுக் கொள்ள வேணும். ஏனென்றால் இப்போது மலைவாசஸ்தலமான மசூரிக்குப் போகப் போகிறோம்.

டேராடூனிலிருந்து மசூரி இருபத்தேழு மைல் தான். காரில் போனால் ஒரு மணி நேரம் பிரயாணம். ஆனால் நேரம் பார்த்துக் கிளம்ப வேணும். காரணம் மலை மேல் செல்லும் பாதையானதால் மிகவும் அபாயகரமான பல இடங்கள் இருக்கின்றன. ஆகையால் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் கீழிருந்து கார்கள் மலைக்கு மேலே போகின்றன. ஒரு குறிப்பிட்ட நேரத்தில் மலை மேலிருந்து கார்கள் கீழே இறங்கி வருகின்றன. அந்த நேரத்தைத் தெரிந்து கொண்டுசென்றால்தான் ஒரு மணிப்பிரயாணம்.

எங்கள் கார் கொஞ்ச நேரத்துக் கெல்லாம் மலைச் சாலை மேலே ஏறத் தொடங்கியது. மலைப் பிரதேசங்களின் வழியே கார் செல்ல ஆரம்பித்தது. "கோடைக்கால வாசஸ்தலம் மசூரி எப்படி இருக்கும் !" என்று அருகிலிருந்தவரைக் கேட்டேன். "சொர்க்கம் போல் இருக்கும்" என்று சொன்னார். அவர் சொன்னது எவ்வளவு உண்மை என்பதைக் காரில் போகும்போது உணர்ந்து கொள்ள முடிந்தது.

மலைப் பாதையில் 'ஙய்' 'ஙய்' என்ற சத்தத்துடன் கார் 'விர்' 'விர்' என்று சென்று கொண்டிருந்தது. போகும் போது எதிரே ஒரு பெரிய மலை குறுக்கே நிற்கிறது. சரி, இத்துடன் சாலை முடிந்தது. இனிமேல் இறங்கிச் செல்ல வேண்டியது தான் என்று தோன்றுகிறது. ஆனால் உண்மையில் அந்த மலையை வளைத்துக் கொண்டு பாதை மேலே போகிறது. மறுபடியும் எதிரே மலை ; இனிமேல் வழி கிடையாது என்ற பிரமை. மறுபடியும் பாதையில் ஒரு பயங்கரமான வளைவு. இப்படியாகப் பத்துப் பன்னிரண்டு தடவைகள் வளைந்து வளைந்து கடந்து செல்கிறோம்.

ஒரு இடத்தில் பாதையில் குறுக்கே கதவு போட்டு மூடி வைத்திருக்கிறார்கள். திடீர் என்று கார் நிற்கிறது. நமக்கெல்லாம் பயம் ஏற்படுகிறது, என்னமோ ஏதோ என்று. யார் யாரோ அவசரம் அவசரமாக ஓடி வருகிறார்கள். அவர்களால் நமக்கோ, நாம் ஏறிச் செல்லும் காருக்கோ அபாயம் ஒன்றும் ஏற்படவில்லை. ஆனால் மணிபர்ஸின் கனம் கொஞ்சம் அங்கு கட்டாயமாகக் குறைக்கப்படுகிறது. ஒவ்வொருவரும் இரண்டிரண்டு ரூபாயை அவிழ்க்க வேண்டியிருக்கிறது.

மசூரிக்குப் போக வேண்டுமானால் ஒவ்வொரு தரமும் போகும் போது இரண்டு ரூபாய் வரி செலுத்த வேண்டும். கோடை காலத்தின் குளிர் சுகத்துக்கு ஆசைப்பட்டு ரூபாயைக் கொடுக்காமல் இருந்தால் ஆகுமா !

வரி செலுத்தி ரசீது பெற்றுக் கொண்டவுடன் மீண்டும் கார் கிளம்புகிறது. இப்பொழுது மலைப் பாதைக்கு இரு புறத்திலும் அடர்ந்த காடுகள் தென்படுகின்றன. நீள நீளமான மலை காட்டு மரங்கள். சால், சீடுமரங்கள் உயரம் உயரமாக நிற்கின்றன. திடீர் என்று காடு முடிந்து விடுகிறது. கார் பயங்கரமான ஒரு திருப்பத்தில் திரும்புகிறது. குனிந்து பார்த்தால் உயிரே போய் விடும் போலிருக்கிறது. அவ்வளவு மோசமான பள்ளம். அந்த இடத்தில் தெரியும் மலையோ கருங்கல் பாறையாக இல்லை. சிறியதும் பெரியதுமான கருங்கல்லைச் சேற்றில் சேர்த்துக் குவித்து வைத்தது போல் இருக்கிறது மலையின் தோற்றம்.

இவ்வாறு பல இடையூறுகளைத் தாண்டிக் கொண்டு மசூரி நகருக்கு அருகில் வருகிறோம். அங்கு நம்முடைய கார் நிறுத்தப்படுகிறது. இதற்கு மேல் கார் மேலே செல்ல வேண்டுமானால் காருக்குப் பத்து ரூபாய் வரி கேட்கப்படுகிறது. வசதி இருப்பவர்கள் கொடுத்து விட்டுக் காரை இன்னும் கொஞ்ச தூரம் மேலே எடுத்துப் போகிறார்கள். வசதியில்லாதவர்கள் அங்கேயே நிறுத்தி விட்டுக் கால் நடையாக மசூரியை நோக்கி நடக்க ஆரம்பித்து விடுகிறார்

கள். மசூரி நகரசபை வருமானத்தில் பெரும் பகுதி இந்த மாதிரி வரிகளின் மூலமாகத்தான் கிடைத்து வருகிறதாம்.

இந்த இடத்துக்கு வந்து சேருவதற்குள் சீதோஷ்ண நிலை மாறி விடுகிறது.

"இதுதான் மசூரி" என்றார் நண்பர்.

"ஓகோ! அப்படியா! இங்கே எப்படி யெல்லாமோ இருக்கும் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். இதுதானா!" என்று பெருத்த ஏமாற்றத்துடன் சொன்னேன்.

"என்ன இப்படிச் சொல்கிறீர்கள்! இது நமது பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேருவின் தந்தை மோதிலால் நேருவுக்கு மிகவும் பிடித்தமான ஸ்தலம். கோடைகாலத்தில் இங்குதான் தங்குவார்" என்றார்.

"மோதிலால் நேரு போன்றவர்கள் தங்க வேண்டிய இடம்தான். இந்தக் கடும் குளிரை அவர்கள் போன்ற செல்வந்தர்கள்தான் தாங்க முடியும்" என்றேன்.

ஜில் என்று காற்று வீசிக்கொண்டிருந்தது. சிலர் அதையும் அனுபவித்தார்கள். எனக்கு அதே காற்று மேலே சர் என்று பட்டு உடம்பை வெடவெட வென்று நடுங்கப்பண்ணி விட்டது. பற்கள் தாளம் போட்டன.

அதைக் காண்பித்துக் கொள்ளாமல் கம்பளிக் கோட்டின் காலரை எடுத்துக் கழுத்தை மூடிக் கொண்டு, கைகளைக் கோட்டுப் பைக்குள் போட்டுக் கொண்டு ரொம்ப விறைப்பாக நடக்க ஆரம்பித்தேன்.

அனேகமாக என்னைப் போல்தான் எல்லாரும் விறைப்பாகப் போய்க் கொண்டிருந்தனர்.

இரண்டு பர்லாங்கு தூரம் நடந்து மேலே சென்று மசூரியை அடைந்தோம். மசூரிப் பட்டணம் ஆறாயிரத்து எண்ணூறு அடி உயரத்தில் உள்ள இந்த மலை உச்சியில் ஒன்றரை மைல் நீளமுள்ள ஒரு சாலை. அவ்வளவுதான். அந்தச் சாலையில் இருபுறமும் கடைகள். காப்பிக் கிளப்புகள் எல்லாம் இருக்கின்றன. மலைக்கு மேலேயும் ஆங்காங்கு பல பெரிய வீடுகள் தென்படுகின்றன.

ஆனால் அந்த ஒன்றரை மைல் நீளமுள்ள மசூரியின் அழகே அழகுதான். ஜில் ஜில் என்ற காற்று. கண்ணுக்கு எட்டிய தூரம் பசுமையான மரங்கள். பனி மூடிய மலைச் சிகரங்கள். இந்தச் சூழ்நிலைக்கு மத்தியில் ஏற்றமும் இறக்கமுமான மசூரி நகரத்துச் சாலை.

அந்தச்சாலையில் பத்தி பத்தியாக ஆண்களும் பெண்களும் விதம் விதமான ஆடைகள் அணிந்து கொண்டு செல்வதைக் காணலாம். ஸ்திரீகளும், புருஷர்களும், குழந்தைகளும் உல்லாசமாக நடப்பதைப் பார்க்கலாம். சென்னை போன்ற பெரிய நகரங்களில் ஒரே மாதிரியான மனிதர்களைக் காண்கிறோம். ஆனால் இங்கு அப்படி இல்லை. ஐரோப்பிய நாகரிகத்தை மேற்கொண்ட நகர்ப் புறத்துப் பிரமுகர்கள். கிராமங்களில் இருந்து வந்திருக்கும் செல்வந்தர்கள், வட இந்திய பாணியில் கதர் வேஷ்டி உடுத்திக் கொண்டிருக்கும் தேசபக்தர்கள், இப்படியாகக் குமரி முனையிலிருந்து, காஷ்மீரம் வரையில் உள்ள எல்லா ராஜ்யத்தைச் சேர்ந்த பலதிறப் பட்டவர்களைக் காணலாம். இந்தியாவில் உள்ள எல்லா ஜாதி மனிதர்களையும் காணக்கூடிய காட்சிச் சாலைதான் மசூரி நகரம் என்று கூறினால் அது மிகைப் படுத்துவதாகாது.

வயோதிகர்களும், நோயாளிகளும் ரிக்ஷா வண்டியில் செல்கிறார்கள். ஒரு ஆளை வைத்து இழுக்கும் ரிக்ஷாதான். ஆனால் அந்த ரிக்ஷாவுக்கு ஐந்து பேர் வேண்டியிருக்கிறது. மூன்று பேர் ரிக்ஷாவுக்குப் பின்னால் நின்று தள்ளுகிறார்கள். இரண்டு பேர் முன்னால் நின்று இழுக்கிறார்கள். மலைகளில் ஏறி இறங்குவதற்கு முடியாதவர்களைச் சுமந்து செல்லும் அதிசயமான பல்லக்கும் அங்கு இருக்கிறது.

உத்தரப் பிரதேசத்தில் இதுவரையில் நாங்கள் பார்த்த நகரங்களுக்குள் மனிதனை வைத்து மனிதன் இழுக்கும் ரிக்ஷாவை எங்குமே பார்க்கவில்லை. மசூரியில்தான் பார்த்தோம். மற்ற இடங்களில் எல்லாம் சைக்கிள் ரிக்ஷா, இல்லையேல் ஆட்டோ ரிக்ஷாதான்.

சாலையின் ஓரமாக ஒரு இடத்தில் சிறு பூங்கா தெரிகிறது. அதைச் சென்று பார்த்து வருவோம். ஆகா, அதில்தான் எத்தனைவிதப் பூச்செடிகள். அந்த மலர் குலுங்கும் செடிகளுக்கு மத்தியில் சித்திரத்தில் எழுதிய தங்க விக்கிரகங்கள் போலக் குழந்தைகள் குதூகலமாகக் கும்மாளி போட்டுக் கொண்டிருக்கின்றனர். ஏதோ மந்திர சக்தியினால் தேவலோகத்துக்குச் சென்று விட்டோமோ என்று தோன்றும், அவ்வளவு அழகான காட்சி.

திரும்பத் திரும்ப இதேதான். வேறு அதிசயமில்லை. இருந்தாலும் மனத்துக்கு எவ்வளவோ ரம்யமாக இருந்தது. பையில் நிறையப் பணம் மட்டும் இருந்து விட்டால் மசூரிப் பட்டணம் சொர்க்க லோகம்தான்.

மசூரியிடம் விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டோம். அப்படி அவசரமாகப் புறப்படா விட்டால் பிறகு கீழே இறங்க முடியாது. இரவை மசூரியில் கழிக்க வேண்டியதுதான். அவ்வாறு ஒரு இரவை மசூரியில் கழிக்க முடியுமா! ரயிலுக்குப் புறப்பட வேண்டுமே!

மசூரியை விட்டுக் கீழே இறங்கி வந்து விட்டோம் என்பதைக் காது அடைப்பும், உஷ்ணக் காற்றும் நினைவூட்டுகின்றன. அங்கிருந்தபடி மசூரி நகரைப் பார்த்தோம். இரவு நேரத்தில் மசூரி அனுபவிப்பதற்குரிய சிறந்த காட்சி. மசூரி நகரத்தின் வீதி மின்சாரத் தீபங்கள் அந்த மலைக்குத் தீபஹாரம் சூட்டியது போல் காட்சி தருகின்றன. சற்றுத் தள்ளிப் போய்ப் பார்த்தால் தீபஹாரம் மறைந்து விடுகிறது. அங்கும் இங்குமாகத் தீபங்கள் காண்கின்றன. வான வெளியில் சுற்றிச் சுற்றி அலுத்துப்போன நட்சத்திரங்கள் மசூரி மலையில் ஓய்வு எடுத்துக் கொள்வதற்காக இறங்கி இருப்பதாகவே தோன்றியது.

இந்த அழகான காட்சிகளைப் பார்க்கும் வாய்ப்பைப் பிரத்தியேகமாக ஏற்பாடு செய்த சர்க்கார் அதிகாரிகளுக்கு எப்படி நன்றி செலுத்துவது என்றுதான் தெரியவில்லை.

கடைசியாக உத்தரப் பிரதேசத்துக்கு ஒரு வணக்கம் செய்து விட்டுக் கிளம்பினோம். ஐந்து நதிகள் பாயும் பஞ்சாபுக்குப் புறப்படுவோம். நாளை பஞ்சாபில் உலகிலேயே மிகப் பெரிய அணைகளில் ஒன்றான பக்ராநங்கல் அணை கட்டி வரும் அற்புதத்தைப் பார்ப்பதற்குப் போகலாம். (தொடரும்)

## "உங்களுக்கு கொடுக்கப்படும் உத்திரவாதம் எவ்வளவு காலம் நீடிப்பு?"

கடிகாரம் வாங்குபவர் ஒரு வருஷ காலத்தில் தமது கடிகாரத்தின் தயாரிப்பில் ஏதாவது குறைபாடுகள் இருக்கின்றனவா என்பதைத் தெரிந்து கொள்ளப் போதுமான அவகாசம் இருக்கிறது.

அதிக கால உத்திரவாதம் கொடுப்பதில் அர்த்தமே இல்லை. நீங்கள் கடிகாரம் வாங்கும்போது உங்கள் வியாபாரி அதிக கால உத்திரவாதம் கொடுப்பாரே யானால் நீங்கள் மேற்கூறியதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டியது அவசியம். உத்திரவாதத்தின் அதிக கால அளவு கடிகாரத்தின் தரத்தை நிரூபிப்பதல்ல.

நல்ல ஸ்விஸ் கடிகாரங்கள் ஒரு வருஷ உத்திரவாதம் உள்ளவை.



**இது தான் ஜுவெல்டு-லீவர்**

இவ்விரண்டு 'லீவர்-சுத்தியல்'களும் நாளொன்றுக்கு 4,32,000 தடவைகள் எஸ்கேப் - வீலின் பற்களைத் தட்டுகின்றன. இவற்றின் நுனிகளில் ஜுவல் பொருத்தியிருந்தால்தான் இச் சுத்தியல்கள் வருஷக் கணக்கில் தேய்மானத்தை எதிர்த்து நிற்கும். நிரந்தரமாக உழைக்க வேறு சில இடங்களிலும் ஜுவல்கள் தேவை. எனினும் இவ்விரண்டு ஜுவல்களும் அத்தியாவசியமானவை.

ஸ்விஸ் ஜுவெல்டு-லீவர் கடிகாரம் தான் நீங்கள் செலவு செய்யும் பணத்திற்குச் சரியான பெறுமானம்



**ஸ்விட்ஸர்லாந்து கடிகாரத்தயாரிப்பாளர்கள்**

FHI - 20 - TAM

# மஞ்சுளா

ராமப்ரியா

நீண்ட கடல் அமைதியாக அலைகளை வீசிக் கொண்டிருந்தது. "எஸ். எஸ். கடல் ராணி" என்ற கப்பல் கம்பீரமாக அலைகளில் மிதந்து ஒய்யாரமாகச் செல்ல ஆரம்பித்தது. துறை முகத்தில் வழி அனுப்ப வந்தவர்கள் போகும் கப்பலையே கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டு நின்றார்கள்.

கரையில் நின்றுகொண்டு தூரத்தில் போகும் கப்பலையே பார்த்துக் கொண்டிருந்த சாந்தாவின் கண்கள் பனித்தன.

"சாந்தா! அசடுமாதிரி நீ ஏன் அழுகிறாய்! அவள் ஊருக்குப் போவதில் எனக்கு எவ்வளவு சந்தோஷம் தெரியுமா! என் அருமைத் தங்கை மஞ்சுளா இம்! கஷ்டம் இல்லாமல் சிங்கப்பூரில் பெற்றோர்களின் அரவணைப்பில் சந்தோஷமாக இருப்பாள் என்பதை நினைக்க எனக்கு நிம்மதியாக இருக்கிறது. இன்றைக்கு எட்டாவது நாள் அவள் செல்வன் சேகரனோடு சிங்கப்பூரில் என் பெற்றோருடன் ஆனந்தமாகத் தீபாவளியைக் கொண்டாடுவாள். வா, போகலாம்!" என்றான் அவள் கணவன் பாஸ்கரன்.

சாந்தா பெருமூச்சு விட்டவாறு கணவனைப் பின் தொடர்ந்து காரில் ஏறிக் கொண்டாள்.

• • •

கப்பலில் முதல் வகுப்பில் வெகு சௌகரியமாக அமைந்திருந்த தன் அறையிலிருந்தபடியே மஞ்சுளா வெளியே ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தாள். கடல் நிறம் தொலைவிலே பசுமையும் நீலமும் கலந்து தென்பட்டது. பிரம்மாண்டமான சென்னைப் பட்டினம் பையப் பைய மறைந்து கொண்டே வந்தது. மூன்று வயதுள்ள சேகரன் கட்டிலில் தன் நினைவில்லாமல் படுத்துக் கொண்டிருந்தான். தலையில் ஐஸ் பை வைக்கப்பட்டிருந்தது. குழந்தையையே கண் கொட்டாமல் பார்த்தபடி சிலையாக உட்கார்ந்து கொண்டிருந்தாள் மஞ்சுளா.

சேகரன்! அவளுடைய ஜீவாதாரமே அவன் தானே! கப்பலில் ஏறும்போது இலேசாக ஜுரம் இருந்தது. கப்பலில் உள்ள டாக்டரிடம் பார்த்துக் கொள்ளச் சொல்லிவிட்டு மஞ்சுளாவின் அண்ணா பாஸ்கரன் கீழே இறங்கிவிட்டான். சாந்தாவிடம் ஏனோ தன்னையறியாத பயம் ஏற்பட்டிருந்தது மஞ்சுளாவுக்கு. "மன்னி! நான் போய் வரட்டுமா!" என்றாள்.

"போய் வா மஞ்சுளா! இந்த மன்னியின் வார்த்தைகளை இது வரை நீ அலக்ஷியம் செய்து வந்தாலும் கடைசியாக ஒரு வார்த்தை சொல்ல விரும்புகிறேன். ஆறு மாத காலம் பெற்றோருடன் இருந்து விட்டுத் தாய்நாட்டுக்குத் திரும்பி விடு. நீ வெளி நாட்டுக்குப் போய் விட்டாய் என்ற அதிர்ச்சி தரும் செய்தியே உன் கணவரைத் திருத்திப் பொறுப்புள்ளவராக்கி விடும்" என்று சொல்லி விட்டுக் கப்பலிலிருந்து இறங்கி விட்டாள் சாந்தா.

மஞ்சுளா ஒன்றுமே சொல்லாமல் வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்தாள். சாந்தாவின் வார்த்தைகள் 'டணார் டணார்' என்று அவள் காதில் ஒலித்துக் கொண்டிருந்தன.

ஏற்கனவே லேசாக ஜுரமடித்துக் கொண்டிருந்த சேகரனுக்குக் கப்பலில் வந்து உட்கார்ந்து அந்த உப்புக்காற்று பட்டவுடன் விறு விறு வென்று ஜுரம் விஷம் போல் ஏற ஆரம்பித்தது. கப்பலும் நகர ஆரம்பித்து விட்டதால் அவளுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. டாக்டரை மறுபடியும் கூப்பிடச் செய்தாள். டாக்டர் வந்து பார்த்தவுடன் 104 டிகிரி ஜுரம் இருப்பது தெரிந்தது. இன்ஜெக்ஷன் கொடுத்து விட்டு, "ஐஸை மட்டும் வைத்துக் கொண்டே இருங்கள், அம்மா! பகவானை நம்புங்கள். நாம் போவது சமுத்திரத்தில். ஒன்றும் செய்வதற்கில்லை. தைரியத்தை மட்டும் இழந்து விடாதீர்கள்" என்று சொல்லி விட்டுப் போனார் டாக்டர்.

குழந்தை புரண்டான். உதடுகள் மெல்ல அசைந்தன. "அம்மா!" என்று ஈனஸ்வரத்தில் கூப்பிட்டான்.

"ஏண்டா, என் கண்ணே! இதோ இருக்கிறேனே! என்ன ராஜா வேண்டும் உனக்கு!" குழந்தையை ஒரு கையால் அணைத்தவாறு கேட்டாள் மஞ்சுளா.

"அப்பா விட்டுத்தானே அம்மா போகிறோம்!" என்றான் சேகரன்.

"ஆமாம். நீ பேசாமல் தூங்க வேண்டும்" என்றாள் மஞ்சுளா.

"அப்பா ஸ்டேஷனுக்கு வந்திருப்பா. என்னை எழுப்பறியா!" என்றான்.

மஞ்சுளாவுக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது. ஆகட்டும் என்பதற்கு அடையாளமாகத் தலையை ஆட்டினாள். ஜுரவேகத்தினால் மீண்டும் நித்திரையிலாழ்ந்தான் சேகரன். மஞ்சுளாவுக்குச் சேகரனைப் பார்க்கப் பார்க்க அழுகை பீறிட்டுக் கொண்டு வந்தது. குழந்தை தன்னை விட்டுப் போய் விட்டால்...! அவளுடைய அடிவயிறு மேலே எழும்பியது. வேதனை தாங்காமல் வயிற்றைக் கையினால் இறுக்கிப் பிடித்துக் கொண்டாள்.

சிங்கப்பூரில் பெரிய வர்த்தகரான பாலசுந்தரத்தின் அருமைப் பெண்தான் மஞ்சுளா. அவருடைய பிள்ளை பாஸ்கரனை டாக்டருக்குப் படிக்க வைத்துச் சென்னையிலேயே அவன் மனைவியோடு குடித்தனம் வைத்துவிட்டு மஞ்சுளாவுக்கும் கல்யாணத்தை இந்தியாவிலே செய்தார். தஞ்சாவூர் மிராசுதாரான சேஷகிரிக்கு மஞ்சுளாவைக் கலியாணம் செய்து கொடுத்து விட்டு மீண்டும் சிங்கப்பூருக்குத் தம் மனைவியோடு பயணமானார் பாலசுந்தரம்.

மஞ்சுளா சேஷகிரியுடன் தஞ்சையில் குடித்தனம் செய்யப் போய் விட்டாள். சேஷகிரி நல்ல அழகன். பி. ஏ. பாஸ் செய்தவன். இருந்தும் வேலை ஒன்றும் கிடைக்கவில்லை. இருக்கும் நிலங்களை வைத்துக் கொண்டு அவர்கள் ஆனந்தமாகவே வாழ்க்கை நடத்தி வந்தார்கள்.

ஆறுமாத காலம் சென்றது. யாருடைய கண்பட்டதோ மஞ்சு, சேஷகிரி வாழ்க்கைப் பாதையில் கரடு முரடான திருப்பம் — படுபாதாளமான பள்ளம் என்றுகூடச் சொல்லலாம், வந்தது. அதாவது யாருமே கண்டிராத ஒரு புயல் காற்று தஞ்சை ஜில்லாவில் பேய்க்கோலம் கொண்டு நிலங்களையும் தோட்டம் துரவுகளையும் நாசமாக்கியது. இயற்கையின் வெறியில் சேஷகிரியின் நிலங்களும் தோட்டங்களும் மட்டும் தப்புமா? அந்த வருஷம் சேஷகிரிக்கு ஏக கஷ்டம். மஞ்சுவையும் அவனையும் தலை தூக்கவொட்டாமல் செய்து விட்டது. மஞ்சுளா தன் கணவனை எவ்வளவோ தேற்றினாள். தன்னிடமிருந்த நகைகளில் ஒன்றிரண்டைக் கொடுத்து கஷ்டத்தை சமாளிக்கச் சொன்னாள். முதலில் மஞ்சுவின் நகைகளைத் தொடவே மறுத்த சேஷகிரி வேறு வழியில்லாமல் ஒவ்வொன்றாக விற்றுச் செலவழிப்பதற்கு ஆரம்பித்தான்.

சேஷகிரிக்கு ஏற்பட்ட பெருகஷ்டத்தைக் கேள்விப்பட்டுப் பாஸ்கரன் சென்னையிலிருந்து ஓடோடியும் வந்தான். சேஷகிரியையும் மஞ்சுவையும் தன்னிடமே வந்து இருக்கச் சொல்லி மன்றாடினான் பாஸ்கரன். சென்னையிலேயே

தான் ஏதேனும் அவனுக்கு வேலை பார்த்துத் தருவதாகவும் சொன்னான். சேஷகிரி வயதான தன் தாயாரையும் சொந்த வீட்டையும் விட்டு ஒரு இடமும் வரத் தயாராக இல்லை என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டான்.

பாஸ்கரன் ரொம்பவும் ஏமாற்றத்தோடு சென்னை திரும்பினான். மஞ்சுவும் சேஷகிரி வராததால் தானும் வர முடியாது என்று சொல்லி விட்டாள். அப்போது அவள் மூன்று மாதக் கர்ப்பிணி.

போதாத காலத்தினால் சேஷகிரிக்கு நஷ்டத்துக்கு மேல் நஷ்டம். வேலையும் கிடைக்க வில்லை. குடும்பமே தத்தளித்துக் கொண்டிருந்தது. மஞ்சுளாவின் முதல் பிரசவத்துக்குப் பிறந்தகத்தில்தான் இருக்க வேண்டுமென்று சொல்லிப் பாஸ்கரன் மஞ்சுவை அழைத்துச் சென்று விட்டான்.

மஞ்சுளா சென்னை வந்த பிறகுதான் அவள் நகைகளில் பாதிக்கு மேல் விற்றுவி விட்டன என்று பாஸ்கரனுக்குத் தெரிய வந்தது. மஞ்சுவிடமே சேஷகிரியைப் பற்றிக் கண்டபடி பேசினான் பாஸ்கரன்.

"அவரை ஏன் சொல்ல வேண்டும், அண்ணா! அவருடைய நஷ்டத்துக்கோ லாபத்துக்கோ நானும் பொறுப்பாளி யல்லவா! இந்தச் சமயத்தில் உபயோகப்படாத நகைகள் எதற்கு என்று தான் கொடுத்தேன்!" என்று கண்களில் நீர் வழியச் சொன்னாள் மஞ்சு.

பாஸ்கரன் தினம் ஒரு தடவையாவது சேஷகிரியைத் திட்டாமல் இருப்பதில்லை. மஞ்சு ரொம்பவும் பொறுமையோடு மூன்று மாதம் தள்ளினாள். சேகரன் பிறந்த இரண்டு மாதத்துக்கெல்லாம் மீண்டும் தஞ்சைக்கே கணவனிடம் கொண்டு போய் விடச் சொல்லிப் பாஸ்கரனை நச்சரித்துத் தஞ்சைக்கு வந்துவிட்டாள். பாஸ்கரனுக்கு இதில் ரொம்பவும் கோபம். இரண்டு வருடங்கள் பாஸ்கரன் மஞ்சுவைப் போய்ப் பார்க்கவே இல்லை. சிங்கப்பூரிலிருந்து பாலசுந்தரம் மஞ்சுவின் சுகத்தைப் பற்றி வாரமொருமுறை பாஸ்கரனுக்கு எழுதிக் கேட்டுக் கொண்டே இருப்பது வேறு அவனுக்கு மஞ்சுவைப் பார்க்க வேண்டும் என்று தோன்றியது. ஆகையால் திடீரென்று ஒரு நாள் சொல்லாமல் தஞ்சாவூருக்குப் புறப்பட்டுச் சென்றான்.

இரண்டு வருட காலத்தில் சேஷகிரியின் குடும்ப நிலை ரொம்ப மோசமாகப் போயிருந்தது. பாஸ்கரன் அப்போதுதான் ரயிலிலிருந்து வந்தவன் மஞ்சுவுக்கும் சேஷகிரிக்கும் பலமான வாக்குவாதம் நடப்பதை அறிந்து வாசலிலேயே நின்று நிதானமாக உள்ளே என்ன நடக்கிறதென்பதை அறியும் பொருட்டுக் கேட்கலானான்.

"இந்தக் கஷ்ட நிலையிலுமா இன்னும் உமது வீறாப்பு போகவில்லை. இந்தச் சமயத்தில் என் தகப்பனாருக்கு நம் நிலைமையை விவரித்துத் தபால் எழுதினால் ஏதாவது பண உதவி செய்ய மாட்டாரா! இல்லையென்றால் அண்ணா பாஸ்கரனிடமாவது உதவி பெறக் கூடாதா!" இது தொண்டையை அடைத்துக் கொண்டு சொல்லும் மஞ்சுவின் குரல்தான்.

"இந்தா, மஞ்சு! சும்மா உன் தகப்பனாரிடமோ தமயனிடமோ உதவி கேட்க நான் தயாராக இல்லை. காலம் இப்படியே இருக்

காது. நமக்கும் நல்ல காலம் வரும். அது வரை பொறுமையாக இரு!''

மஞ்சு ஆத்திரத்தில் படபடக்க, "பொறுமையா! இனி பொறுமைக்கே வழி யில்லை. என்னுடைய தாலிக் கயிற்றைத் தவிர வேறு எல்லாம் விற்று விட்டோம். சேகரனுக்குக் கூட இனி போஷாக்கு இல்லாமல் கஷ்டப் படும் நிலைமை வந்த பிறகுதான் என் நெஞ்சம் கொதிக்கிறது. இந்த நிமிஷமே என்னையும் குழந்தையையும் பாஸ்கரனிடம் அனுப்பி விடுங்கள்!'' என்று கத்தினாள்.

இதையெல்லாம் வெளியில் நின்று கேட்டுக் கொண்டிருந்த பாஸ்கரனும் ஆத்திரத்துடன் உள்ளே வந்து சேஷகிரியை வாயில் வந்தபடி பேசிவிட்டு அன்றே மஞ்சுவுடனும் சேகரனுடனும் சென்னைக்குக் கிளம்பி விட்டான்.

மஞ்சுளா சென்னை வந்த பிறகு, தான் செய்தது சரியா என்று தன்னைத் தானே கேட்டுக் கொள்வாள். பாஸ்கரனின் மனைவி சாந்தா மஞ்சுளா செய்தது கொஞ்சம் கூடச் சரியில்லை என்று அவளிடமே அடித்துச் சொன்னாள்: "அவர் எவ்வளவு தன்னம்பிக்கையுடன் பிறரிடம் உதவி கேட்கக் கூடாது என்று இருக்கிறார், மஞ்சு! அந்தப் புருஷனுடன் கூட இருந்து அவரை உற்சாகப்படுத்தி ஊக்கம் கொடுக்காமல் இப்படி வந்துவிட்டாயே! நீயும் குழந்தையும் இல்லாமல் அவர் எவ்வளவு மனமொடிந்து போயிருப்பார்!'' என்றெல்லாம் மஞ்சுவுடனும் பாஸ்கரனுடனும் வாதிப்பாள்.

சிங்கப்பூருக்கு எல்லாம் விவரமாக எழுதி விட்டான் பாஸ்கரன். அங்கே பாலசுந்தரத்திடமிருந்து, "எவ்வளவு செலவானாலும் உடனே மஞ்சுவையும் குழந்தையையும் கப்பலேற்றிச் சிங்கப்பூருக்கு அனுப்பிவிடு'' என்று கடிதம் வந்து விட்டது.

* * *

"அம்மா!'' என்று குழந்தை சேகரன் ஈனஸ்வரத்தில் அழைத்தான். அவனுக்கு மூச்சுத் திணறியது. உடம்பு நெருப்பாய்க் கொதித்தது. தெய்வமே அனுப்பி வைத்ததுபோல் டாக்டர் அந்தச் சமயம் அங்கே வந்தார்.

அவரைக் கண்டதும் மஞ்சு பரபரப்புடன், "டாக்டர், எனக்கு ரொம்பவும் பயமாயிருக்கிறது. நீங்கள் எனக்கு ஒரு உதவி செய்ய வேண்டும். என்னை எப்படியாவது நாகப்பட்டினத்தில் இறக்கிவிட ஏற்பாடு செய்யுங்கள். நான் அங்கிருந்து தஞ்சாவூரிலிருக்கும் என் கணவரிடம் போய் விடுவேன். என் அருமைக் குழந்தை அனாதையாகக் கடலில் சாகாமல் நாகப்பட்டினம் போகும் வரையில் பிழைத்திருக்கும்படி மருந்து கொடுங்கள்'' என்று கண்ணீரும் கம்பலையுமாகக் கதறினாள்.

"நீங்கள் தைரியமாக இருங்கள். குழந்தைக்கு இப்போது ஒரு ஊசி போட்டு விட்டு நான் நாளை நீங்கள் நாகப்பட்டினத்தில் இறங்குவதற்கு வழி பண்ணுகிறேன்'' என்று கூறி, சேகரனுக்குப் பண்ண வேண்டிய சிகிச்சைகளைப் பண்ணிவிட்டுச் சென்றார் டாக்டர்.

இரவு பூராவும் மஞ்சுளா கொட்டக் கொட்ட விழித்துக் கொண்டு குழந்தையையே பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். கடலின் கொந்தளிப்பை விட அதிகமாய் அவள் மனம் கொந்தளித்துக் கொண்டிருந்தது.

மறுநாள் காலை ஏழு மணி. நாகப்பட்டினம் கடற்கரையில் கப்பல் நின்றது. டாக்டர் கப்பல் உத்தியோகஸ்தர் ஒருவரையும் அழைத்துக் கொண்டு வந்து மஞ்சுளா அங்கே இறங்குவதற்கு வேண்டிய உதவிகளைச் செய்தார். டாக்டருக்குப் பன்முறை தன் நன்றியையும் வணக்கங்களையும் தெரிவித்து விட்டு மீதி டிக்கட் பணத்தைச் சென்னையில் பாஸ்கரனின் விலாசத்துக்கு அனுப்பச் சொல்லிவிட்டு இறங்கினாள்.

பாஸ்கரன் மஞ்சுளாவிடம் வழிச் செலவுக்குக் கையில் இருநூறு ரூபாய் கொடுத்திருந்தான். நாகப்பட்டினத்திலிருந்து தஞ்சைக்கு ஒரு டாக்ஸி வைத்துக் கொண்டு இரண்டு மணி நேரத்துக்குள் அங்கு போய்ச் சேர்ந்தாள்.

வாசலில் கார் நிற்கும் சப்தம் கேட்டுச் சேஷகிரி உள்ளே இருந்து பார்த்தான். மஞ்சுளா சேகரனை ஏந்திக் கொண்டு வருவதைப் பார்த்ததும் பதறியவனாய், "மஞ்சு! என் கண்மணிக்கு என்ன! ஏன் இப்படி எடுத்துக் கொண்டு வருகிறாய்!'' என்று அலறியவாறு கேட்டான்.

"ஐயோ! நான் மகா பாபி, உங்களிடமிருந்து குழந்தையைப் பிரித்துக் கொண்டு போய் இப்படிக் குற்றுயிராய் உங்கள் முன் கொண்டு வந்தேனே! நம் கண்மணி உங்களுக்காக உயிரை வைத்துக் கொண்டு வந்திருக்கிறான். நன்றாகப் பார்த்து விடுங்கள் குழந்தையை!'' என்று கதறியழுதாள்.

சேஷகிரி ஓரே பாய்ச்சலாக ஓடிப் பக்கத்துத் தெருவிலிருக்கும் டாக்டரை அழைத்து வந்தான்.

எல்லாருக்கும் ஆச்சரியம் தரத்தக்கதாய்ச் சேகரன் இரண்டு நாளில் பிழைத்து விட்டான்.

"நான் எவ்வளவு பெரிய தப்புப் பண்ண இருந்தேன். அதைத் தடுக்கவே பகவான் குழந்தைக்கு உடம்பை அதிகமாக்கி நம்மை ஒன்று சேர்த்தார். இனி எந்தக் கஷ்டத்திலும் உங்களை விட்டுப் பிரிய மாட்டேன்'' என்றாள் மஞ்சு. குழந்தைக்கு ஆரஞ்சுச் சுளையை உரித்துக் கொடுத்துக் கொண்டிருந்த சேஷகிரி, "நீ அப்படிக் கோபித்துக் கொண்டு போகாவிட்டால் இங்கேயே பாங்கியில் இருநூறு ரூபாய் சம்பளத்தில் ஆறு மாதமாகப் பொறுப்புடன் வேலை பார்த்துக் கொண்டிருப்பேனா என்பது சந்தேகம். இப்பொழுது நாம் இருவரும் ஒன்று சேர்ந்து குழந்தைக்கு ஏதேனும் நேராமல் எல்லாம் சுபமாக முடிந்ததே என்று சந்தோஷப் பட வேண்டும். இனி நடந்ததை இருவரும் மறந்து விடுவோம்!'' என்று கரை காணாக் காதலுடன் மஞ்சுவை நோக்கினான்.

* * *

சென்னையில், அன்று வந்த கடிதத்தைப் படித்து விட்டு, "நன்றி கெட்ட பெண்! இவளுக்காக நான் பணத்தைத் தண்ணீராக வாரி இறைத்தேனே! மறுபடியும் அவனிடமே போய்ச் சேர்ந்து விட்டாள் பார்!'' என்று உறுமினான் பாஸ்கரன்.

"மஞ்சு தன் தவறை உணர்ந்து ரொம்பச் சமர்த்தான காரியம் செய்தாளே என்று சந்தோஷப்படுகிறேன். இப்போதாவது அவளுக்கு விடிவு காலம் வந்துவிட்டது'' என்று சொல்லிக் குதித்துக் கொம்மாளம் போட்டாள் சாந்தா.

பாஸ்கரன் பதிலே பேசவில்லை.

# சிவன் கீர்த்தனைகள்

ஸ்வர அமைப்பு — செம்மங்குடி சீனிவாச ஐயர்

கீர்த்தனம் 6 ராகம்: ஸரஸ்வதி ஆதி தாளம்

## பல்லவி

ஸரஸ்வதி தயை நிதி நீ கதி
தன்னருள் தந்தருள்வாய் பாரதி (ஸரஸ்வதி)

## அனுபல்லவி

கரமலர் மிளிர் மணிமாலையும் வீணையும்
கருணை பொழியும் கடைக்கண்ணழகும் வளர் (ஸரஸ்வதி)

## சரணம்

நின் அருளொளி இலையாலும் மன இருள்
நீங்குமோ ஸகல கலைமாதே வெள்
அன்னவாஹனி வெண்கமல மலர் வளரும்
வாணி வெள்ளைக்கலைவாணி புராணி (ஸரஸ்வதி)

ஸரஸ்வதி ராகம் 64-வது மேளமாகிற வாசஸ்பதியில் பிறந்தது.
உபாங்க ராகம், இதன் ஆரோஹணம் : ஸ ரி ம ப த ஸ்
அவரோஹணம் : ஸ் நி த ப ம ரி ஸ
(சதுச்ருதி ரிஷபம், ப்ரதிமத்யமம், சதுச்ருதிதைவதம், கைசிகி நிஷாதம்)

## பல்லவி — 1 களை

ஸா ரீ ; மா பா ; தாஸா | ரீ ஸா ; ஸ்த | நீ தா தபா , ம ||
1 ஸ ர ஸ்வ தி த யை நி தி நீ - - க தி - - -

ரிஸரீ ; மா பா ; தாஸா | ரிஸா ஸ்த ஸாரிஸ் | நீ தா தபா , ம ||
2 ஸ - ர ஸ்வ தி தயை நி தி - - நீ - - - க தி - - -

ரிமபம ரி ஸ ரீ ரீ மா ப த ரிஸ் | நீதா ; ப த | நிதபம ரி ஸ ரீ ||
த - - - ன்ன-ருள் த - ந்த-ருள் வாய் - பா - - - - - ர - தி

ரி ஸா ரீ, மா பா ; ; | ; ; ; ; | ; ; ; ; ||
ஸ - ர ஸ் வ தி - - - - - - - - - -

## அனுபல்லவி

பாதா ரிஸ் நி த பாப மா பதா | ஸா ; ஸ் த ஸா | ரீ ; ரீ ரீ ||
1 க ர ம - லர் - மி ளிர் - மணி மா லை - யும் வீ ணை யும்

பா தா ரி ஸ் நித பா,நிதபமா,பதா | ஸா ; ஸ் தஸா | ரீ ப் ம் ரிஸ் ரீ ||
2 க ர ம - லர்- மி - -ளிர் - மணி மா லை - யும் வீ - - ணை - யும்

ரீ ப் ம் ரீ ஸா,ரி நீ தா , பதா | தபதரி ஸ் நி தா | பா ; ; ; ||
கரு - ணைபொ - ழி யும் கடை க்க - - - ண்ணழ கும்

ரிம்ப்ம் ரீ ஸா,ரி ஸ்ஸ்நித நி பதா | ஸா ரிம் ரிஸ்நிதா | பதபம ரி ஸ ரீ ||
க - ரு- ணை பொ - ழி - யும் - -கடை க்கண் - - - - ணழ கும் - - - வ - ளர்

ரிஸா ரீ, மா பா ; ; ; | ; ; ; ; | ; ; ; ; ||
ஸ - ர ஸ்வ தி - - - - - - - - - - -

## சரணம்

நீ ; பா தா மா பா தாஸா | ஸாரீ, தா தபா ; | ; ம பா த ஸா ||
நின் அ ரு ளொளி இ லை யா - - லும் - - ம ன இ ருள்

ரீ ; ஸா ஸ் ஸ் நித தப நிதபம | பாதா த ப த ரி | ஸா ; ; ; ||
நீ ங்கு மோ - - - ஸ - க - ல - க லை மா - - - தே

நீ ; தப நித தமபா தாஸா,ரி | ரிஸ் நித தபபா,ம | ; ம பா த ஸா ||
நின் ன - ரு ளொ-ளி இலை - யா - - - னல் - - மன இ ருள்
தஸ்ரீ,ஸ் ஸா,ரிஸ்ஸ் நித தப நிதபம | பா தா தபா, தரி | ஸா ; ; ப ம ||
நீ - - - ங்கு - மோ - - - ஸ - க - ல - க லை மா - - - தே வெ - ன்
பதஸா ஸ்ரி நித தா பாபா ப ம | பா தா பா தா | ஸா தா ஸா ரீ ||
ன - - ன்ன - வா - - ஹனி வெண் - க ம ல ம லர் வ ள ரும்
ரி ம் ப் ம் ரீ ஸா ரீ ஸா ; ஸ் ரி | நீ தா பா தம | ப தரிஸ் நித பம ||
வா - - - ணி வெ - ள்ளை க்க - லை - ய ணி பு - ரா - - - ணி - - -
ரி ஸா ரீ, மா பா ; ; ; | ; ; ; ; | ; ; ; ; ||
ஸ - ர ஸ்வ தீ - - - - - - - - - - -

## டி.கே.சி.யின் கடிதங்கள்

திருக்குற்றாலம்,
6—9—42

அருமை நண்பர் கவிஞர் தேசிக விநாயகம் பிள்ளை அவர்களுக்கு,

ஆடம்பரம் இல்லாமல் அறுபதாண்டு நிறைவை ஒரு சிறு கிரியையாக நடத்த ஏற்பாடாயிருந்தது. திருக் குற்றாலநாதரை இன்று காலை 10 மணிக்குச் சேவித்து வருவதற்கு, குறிப்பிட்ட நண்பர்களையும் இங்கு சாரலுக்கு வந்திருந்த செட்டி நாட்டு நண்பர்களையும் அழைத்திருந்தேன். என் ஜாகைக்குப் பல நண்பர்களும் வந்திருந்தார்கள், கோவிலுக்குப் போவதற்காகத்தான்.

அப்போது தபால்க்காரன் வந்து ஒரு கடிதத்தைக் கொடுத்தான். நான் பிரித்துப் பார்க்கவும் தங்களுடைய கடிதமும் வாழ்த்துப் பாக்களும் இருந்தன

செய்யுள்கள் மூன்றிலும் வாழ்த்தோடு புகழ்ச்சியும் இருந்தது பற்றி நானே வாசித்துக் காட்டுவதில் கொஞ்சம் அசௌகரியம் இருந்ததை உணர்ந்தேன். ஆனாலும் அவைகள் தமிழ் மகளுக்கு அர்ப்பணமாய் இருந்தது பற்றி நானே வாசிக்கலாம், குற்றம் இல்லை என்று எண்ணி வாசித்தேன்.

கேட்டவர்கள் அப்படியே லயித்து விட்டார்கள்.

முதல்க் கவி ஆசை பாவத்தை அழகாய்க் காட்டுகிறது. ஆசைக்கு அளவு கிடையாது. எந்தத் தாய்க்கும் தன் குழந்தை ராஜா அல்லவா! வாழவேண்டும் நிலைத்து வாழ வேண்டும், எப்படி :

" கன்னித் தமிழேபோல்
கம்பன் கவியேபோல் "

இவைகளுக்குமேல்—ஸ்தூலமாக,

" மன்னும் பொதிகை மலையேபோல் "

இரண்டாவது கவியில் அருமை பாவம் அப்படியே கிடக்கிறது.

" என்னருமை நண்பா!
இனிய கலாரசிகா!
தென்னர் தமிழ் வளர்க்கும்
தேசிகா!"

என்று பாடும்போது தாங்கள் என்னை ஆர்வத்தோடு தழுவிக் கொள்ளுவதாகவே உணர்ச்சி வருகிறது. மூன்றாவது கவியில் தமிழிடத்திலுள்ள ஆத்திரம் போய் முருகனது திருவடியைப் பற்றுவது வெகு அழகான பாவம்.

" அன்னை தமிழ்ச் செல்விக்(கு)
அருந்தொண்டு செய்தின்றும்
மன்னுலகில் பல்லாண்டு
வாழியவே "—

முருகன் கண்பார்த்துக் கனிந்து அருள் பாலிக்கும் காரணமாக.

இந்த உண்மைப் பண்புக்கும் எளிமைக்கும் தமிழுக்கும் எங்கே போகத் தங்களைத் தவிர்த்து!

கவிக்குள்ப் பொதிந்து வைத்து விட்டால் எந்தப் பொருளும் பழுதுபடாமல் இருக்கும் என்று முன் ஒரு கவிஞர் சொல்லியிருக்கிறார். ஆயிரம் ரூபாய் கொடுத்து வாங்கிய டாக்கா மஸ்லின் கொண்டு பதிந்து வைத்தாலும் பயனில்லை.

" நாற்றுப்பத் தாயிரம்
பொன்பெறினும் நாற்சீலை
நாற்றிங்கள் நாளுக்குள்
நைந்துவிடும்—மாற்றலரைப்
பொன்றப் பொருதடக்கைப்
போர்வேல் அகளங்கா!
என்றும் கிழியாதென்
பாட்டு."

தமிழ் உணர்ச்சி என்று ஒன்று இருக்கும் வரை தங்கள் பாட்டு நிற்கும். அதை ஒட்டி என் பெயரும் நின்றுதானே ஆக வேணும்.

மனங் கனிந்து வந்த சொல்லுக்கு மாற்றுப் பத்தரை மாற்றா? அல்ல. ஆயிரத் தரை மாற்றல்லவா? அதற்கு விலையேது? விலை மதிக்க முடியாத கவிகள்.

அன்புள்ள
டி. கே. சிதம்பரநாதன்

# வஸந்தத்தின் புத்துணர்ச்சி

## உங்களுக்கு இன்றும்....என்றும்!

காஷ்மீர்பொக்கே டால்கம் பௌடர் சுத்த மனோரம்மியமே! மிக்க மிருதுவாக உங்கள் உடலில் வஸந்தகாள் காலையின் புத்துணர்ச்சியை அள்ளித் தெளிக்கிறது- உடலை ரம்மியமணத்துடனும் குளிர்ச்சியுடனும் மணிக்கணக்காக வைத்திருக்கிறது. அதிகப்படி ஈரத்தை உறிஞ்சுகிறது ... அரிப்பையும் எரிச்சலையும் தவிர்க்கிறது ... உங்கள் வசீகரத்தையும் மென்மையையும் பன்மடங் காக்குகிறது.




# காஷ்மீர் பொக்கே

## டால்கம் பௌடர்

ஆண்கள் விரும்பும் நறுமணத்துடன்

ஒரு கால்கேட்—பாமாலிவ் தயாரிப்பு

கால்கேட் 1806 முதல் தரத்துக்குப் பெயர் போனது

# நீரிழிவு

## குணமாகும்

சிறு நீரில் சர்க்கரை காண்பது நீரிழிவு (DIABETES) நோயின் முக்கிய அறிகுறியாகும். உங்களுக்குப் பசியும் தாகமும் அதிகமா யிருந்தாலும், உடல் உருகிக் கொண்டு வந்தாலும், அடிக்கடி நீர் இறங்கினாலும் உங்களுக்கு நீரிழிவு நோய் இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. இக்கொடிய உடல் உருக்கி நோய், தான் பற்றினவர்களைக் கடைசி மூச்சு உள்ள வரையில் விடுவதில்லை; கொஞ்சம் கொஞ்சமாக அவர்களை மரண வாயிலுக்கு இழுத்துச் சென்று விடும். நீரிழிவு வியாதியைக் குணப்படுத்த இன்ஜெக்ஷன்கள் போடப்படுகின்றன; ஆனால் அவற்றினால் வியாதி கொஞ்சமும் குணமாவதில்லை. மேற்படி இன்ஜெக்ஷன்கள் நீரில் சர்க்கரையைக் குறைக்கின்றன—அதுவும் மருந்துச் சக்தி உள்ள வரையில்தான். ஆகவே, உபாதைகளைத் தடுக்க வாழ்நாள் முழுவதும் ஊசிகள் போட்டுக்கொள்ள வேண்டியதுதான். இதனால் அதிக செலவு ஏற்படுவது மட்டுமல்லாது உடலுக்கு கஷ்டம் உண்டாகிறது. நோய் குணப்படுத்தாது போனால் நீங்கள், புண்களினாலும், கண் நோய், பல் நோய், வயிற்றுக் கோளாறு முதலிய பலவித வேதனைகளால் சிரமப்பட நேருகிறது. நீரிழிவு வியாதியை, வீனஸ் சார்ம் மாத்திரைகளை உபயோகித்து, சிக்கனமாகவும், சுலபமாகவும், நிச்சயமாகவும், பத்திரமாகவும் சிகிச்சை பெறுங்கள்.

பண்டைக்கால புனித வைத்திய முறைகளைக் கொண்டு, அரிய மூலிகைகளின் சேர்க்கையுடன் தயார் செய்யப்படும் வீனஸ் சார்ம் மாத்திரைகள், நோயை அடியோடு அகற்றுவதுடன், எத்தனையோ பேர்களை இன்ஜெக்ஷன் அல்லது ஒருவிதமான பட்டினி இல்லாமல் குணமாக்கி யிருக்கிறது. இதை உபயோகித்து பல ஆயிரக்கணக்கானவர்கள், இந்நோயின் மரணப் பிடியிலிருந்து தப்பி யிருக்கிறார்கள். இம் மருந்தை உபயோகிக்கத் தொடங்கிய இரண்டு மூன்று நாட்களுக்கெல்லாம், நீரில் சர்க்கரை குறைகிறது; அத்துடன் அதிக நீர் இறங்குவதும் நிற்கிறது. சில நாட்கள் உபயோகித்தாலே நோய் தணிந்து திருப்தி ஏற்படுகிறது. வீட்டிலிருந்தபடி வீனஸ் சார்ம் சிகிச்சையைத் துவக்குங்கள். விசேஷ பத்தியம் எதுவும் இல்லை. நீங்களே அதன் குணத்தை அறிவீர்கள். இதுபற்றிய விரிவான இலவச ஆங்கிலப் பிரசுரத்தை வரவழைத்துப் பாருங்கள்.

**50 மாத்திரைகள் கொண்ட புட்டி ஒன்றின் விலை 6-12-0**

(பாக்கிங் தபால் செலவு இனும்)

**வீனஸ் ரிஸர்ச் லாபரேட்டரி (K.M.)**

தபால் பெட்டி நெ. 587. கல்கத்தா

உறுதியான
சுத்தமான
பற்களுக்கு




பல காலம் நீடித்து வரும்

**கேஷ்ரஞ்சன்**

தாங்கள்
கூந்தலின்
நன்மையை
விரும்புவோர்

**விரும்புவார்கள்**

கவிராஜ்
என். என். சென் அண்ட் கம்பெனி லிமிடெட்
கல்கத்தா




## 41. கோட்டாறு

ஆன்ற பெருமையுடைய தமிழ் நாட்டில் 'மூன்று' என்ற எண் மிகவும் அருமையாகப் போற்றப்படுகின்றது. உலகம் மூன்று; தமிழ் மூன்று; தேவரில் சிறந்தவர் மூவர்; தமிழ் நாட்டு முடி மன்னர் மூவர்; அன்னார் முடிமேற் கொண்டு பாராட்டிய நூல் முப்பால். இப்பண்பினைக் கண்ட பாவலர் ஒருவர்,

" மும்மலையும் முந்நாடும்
முந்நதியும் முப்பதியும்
மும்முரசும் முத்தமிழும்
முக்கொடியும்—மும்மாவும்
தாமுடைய மன்னர்
தடமுடிமேல் தாரன்றே
பாமுறைதேர் வள்ளுவர் முப்பால் "

*[ தார் - மாலை ; முப்பால் - திருக்குறள் ]*

என்று பாடினார். தமிழகத்தில் நாடும் நதியும், மலையும் பதியும், கலையும் கொடியும், முரசும் பரியும் மூன்றாக அமைந்துள்ள முறையினைக் கண்டு முற்றிய இன்பம் உற்றார் அக்கவிஞர். இத்தகைய தமிழகத்தை ஆண்ட மூவேந்தரும் முடிமேல் வைத்துப் போற்றும் பெருமை சான்றது முப்பாலாகிய திருக்குறள் என்று அழகுறக் கூறி முடித்தார்.

சேர சோழ பாண்டியர் என்னும் மூவேந்தரும் ஆட்சி புரிந்த முந்நாடுகளிலும் தமிழே முன்னாளில் வழங்கிற்று. சேர மன்னரில் சிலர் செந்தமிழ்ப் புலவர்களாகவும் கவிஞர்களாகவும் விளங்கினார்கள்; வரிசையறிந்து பரிசளித்துத் தமிழ் அறிஞர்களை ஆதரித்தார்கள்.

அந்நாளில் வஞ்சிமா நகரம் சேர நாட்டின் தலைநகரம். ஆதலால் வஞ்சி வேந்தன் என்றும், வஞ்சியார் கோமான் என்றும் பெயர் பெற்றான் சேர மன்னன்.

" வாழியரோ வாழி
வருபுனல் நீர் ஆன் பொருநை
சூழ்தரும் வஞ்சியார்
கோமான் தன் தொல்குலமே "

என்று சேரன் பழங்குடியைச் சிலம்பு வாழ்த்திற்று. சேர நாட்டாரையும் வஞ்சியார் என்றழைக்கும் வழக்கமுண்டு.

முன்னொரு நாள் கடற்கரையில் இன்புற்றிருந்த ஒரு மங்கை வஞ்சி வீரன் ஒருவனை அங்கே கண்ணுற்றாள். அவன் கட்டழகு அவள் உள்ளத்தைக் கவர்ந்தது. அந்நங்கையை வீரனும் நயந்து நோக்கினான்; இருவர் நெஞ்சமும் கலந்தன. அந்நிலையில் அரசன் ஆணையால் அவ்வீரன் போர்க்களத்திற்கு அழைக்கப்பட்டான். அப்போது மனமும் முகமும் வாடிய மங்கையை நோக்கி, " மாசறு பொன்னே ; வலம்புரி முத்தே! நீ வருந்தாதிரு, விரைவில் வெற்றி பெற்றுத் திரும்பி வருவேன் : உன்னை மணந்து மகிழ்வேன் " என்று உறுதி கூறினான். அவனையன்றி மற்றொருவனை மணப்பதில்லை என்று மங்கையும் வாக்களித்தாள். அன்று முதல் அவள் அல்லும் பகலும் காதலன் வரவு நோக்கிக் காத்திருந்தாள். ஒல்லையில் வருவதாகச் சொல்லிச் சென்றவன் திங்கள் பலவாகியும் திரும்பி வரவில்லை. வஞ்சி நகரத்தான் தன்னை வஞ்சித்து நகர்ந்தானோ என்று எண்ணி எண்ணி நெஞ்சம் கரைந்தாள் நங்கை.

" வஞ்சியேன் என்ற அவன் தன்
ஊர் உரைத்தான் யானும் அவன்
வஞ்சியான் என்பதனால்
வாய் நேர்ந்தேன்—வஞ்சியான்
வஞ்சியேன் வஞ்சியேன்
என்றுரைத்தும் வஞ்சித்தான்
வஞ்சியாய் வஞ்சியார் கோ "

*[ வாய் நேர்ந்தேன் — வாக்களித்தேன் ]*

என்று மனம் வருந்தி முறையிட்டாள். என் உள்ளம் கவர்ந்த வீரன் "வஞ்சியேன், வஞ்சியேன்" என்று பன்முறை உரைத்தான். அப்போது வஞ்சியாகிய தன் ஊரைக் குறித்தான் என்று நான் எண்ணவில்லை; வஞ்சித்து ஓடமாட்டேன் என்று வாக்குறுதி கொடுத்தான் என்று எண்ணினேன். அதை நம்பி நானும் அவனையே மணப்பதாக வாக்களித்தேன். "வஞ்சியேனென்றவன் இப்போது என்னை வஞ்சித்து விட்டானே" என்று தன் ஆற்றாமையை அறிவித்தாள்.

இத்தகைய வஞ்சி நாட்டிலே பல நாடுகள் உண்டு. அவற்றுள் ஒன்று நாஞ்சில் நாடு. அந் நாடு சாலப் பழமை வாய்ந்தது.

"பண்ணை பெருத்த பழநாடு—சுற்றிப்
பார்த்திடக் கண்கள் குளிரும் நாடு"

என்று பாராட்டப் பெற்ற அந் நாட்டில் உப்பும் நெல்லும் ஓய்வின்றி விளையும்; குமரிக் கடலும் குடமலைத் தொடரும் அரணாக நின்று காவல் புரியும்; ஆறும் மழையும் நீர் வளம் பெருக்கும்; அருந்தமிழ் ஆர்வம் அளவின்றிச் சுரக்கும்.

"வஞ்சிநா டதனில் நன்செய் நாடெனச்
செந்தமிழ் வழங்கும் தேயம் ஒன்றுளது,
அதன்
அந்தமில் பெருவளம் அறிவார் யாரே!"

என்று மகிழ்ந்து பாடிற்று மனோன்மணீயம்.

வளமார்ந்த அந்நாட்டை நீரூட்டி வளர்ப்பதற்கு ஒரு நதியும் உண்டு. பழையாறு என்பது அதன் பெயர். அவ்வாற்று வெள்ளத்தை அணைகளில் அணைத்து, கால்களில் எடுத்து, கழனிகளிற் பாய்ச்சி நற்பயன் பெறுவர் நாஞ்சில் நாட்டார். பழையாற்றின் முதல் அணை "பாண்டியன் அணை" என்று பெயர் பெற்றுள்ளது. அவ் ஆற்றின் கரையில் பூதப்பாண்டி என்னும் பெயருடைய ஊர் அமைந்திருக்கின்றது. அழகிய பாண்டியபுரம் என்ற ஊரும் அதற்கு அருகே உண்டு.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே நாஞ்சில் நாட்டை ஆண்ட குறுநில மன்னரின் பெருமை புறநானூற்றிலே பேசப்படுகின்றது. அன்னவருள் ஒருவன் நாஞ்சில் வள்ளுவன். அவன் ஆட்சியில் அமைந்த நாட்டின் வளமும், அவன் கொடைத் திறமும் ஔவையார் முதலிய நல்லிசைப் புலவர்களால் பாடப் பெற்றுள்ளன. அவன் சிறந்த வீரனாகவும் விளங்கினான் என்பது அப்புலவர்களின் வாக்கால் புலனாகின்றது.

பழையாறு பாயும் நன்னாட்டில் வரையாது கொடுக்கும் வள்ளல்கள் பலர் அந் நாளில் வாழ்ந்தனர். அவர்களில் தலைசிறந்தவன் 'ஆய்' என்னும் அருமையான பெயருடையவன். அவன் வறுமையின் பெரும் பகைவன்; அற்றார்க் கெல்லாம் உற்ற துணைவன்; தாயனைய ஆய் என்று தமிழகம் போற்ற வாழ்ந்தவன்.

"இம்மைச் செய்தது மறுமைக் காம்எனும்
அறவிலை வணிகன் ஆய்அலன்"

என்று அவன் பண்பாட்டைப் பாராட்டினார் ஒரு பழந் தமிழ்ப் புலவர். உயர்ந்த குறிக்கோள் உடைய அவ் வள்ளல் "ஈதல் அறம்" என்று எண்ணி வறியவர்க்குப் பொருள் வழங்கினானல்லன். இப் பிறப்பில் ஈதலாகிய அறத்தைச் செய்தால் மறு பிறப்பில் அதன் பயனாகிய இன்பம் விளையும் என்று கருதினானில்லை. 'இல்லார்க்கு ஈதல் பொருளுடையார் கடமை' என்பது அவன் கொள்கை. இத்தகைய விழுமிய நோக்கத்துடன் வாழ்ந்த வள்ளலின் பெருமை தமிழ் நாடெங்கும் பரவிற்று. அவனை ஈன்ற நாடு ஆய் நாடு என்று பெயர் பெற்றது. அதன் தலைநகர் ஆய்குடி ஆயிற்று.

தமிழ் நாட்டைக் குறித்து மேலை நாட்டு அறிஞர்கள் எழுதிப் போந்த பழங் குறிப்புகளில் ஆய்நாடு இடம் பெற்றுள்ளது. ஆய்நாட்டிலே உள்ள பெரிய ஊர் கோட்டாறு என்று யவன அறிஞராகிய தாலமி கூறுகின்றார். இந்நாளில் நாஞ்சில் நாட்டின் தலைநகர் போல் விளங்கும் நாகர்கோவிலையடுத்த கோட்டாறு முன்னாளில் அயல் நாட்டாரும் அறிந்த சிறந்ததோர் நகரமாகத் திகழ்ந்தது என்பதில் ஐயமில்லை.

கோட்டாறு என்பது ஓர் ஆற்றின் பெயர். கோட்டாற்றின் கரையில் எழுந்த ஊர், கோட்டாறு என்று அழைக்கப் பெற்றது. வாட்டாறு, வெள்ளாறு, ஐயாறு முதலிய ஊர்ப் பெயர்கள் ஆற்றுப் பெயர்களின் அடியாகப் பிறந்தவண்ணமே கோட்டாறும் ஊர்ப் பெயராயிற்று. நாஞ்சில் நாட்டின் வழியாகச் செல்லும் பழையாறு ஆதியில் கோட்டாறு என்று பெயர் பெற்றிருந்தது என்று அறிந்தோர் கூறுவர்.

சேர நாட்டைச் சேர்ந்த கோட்டாறு பாண்டி நாட்டின் எல்லைப் புறத்தில் அமைந்ததனால் அடிக்கடி தொல்லையுற்றது; பாண்டியரும் சோழரும் படையெடுத்த காலங்களில் அல்லற்பட்டது. நெடுமாறன் என்ற பாண்டியன் கோட்டாற்றைப் பாழாக்கினான். குலோத்துங்க சோழனும் அந்நகரை வென்று அழித்தான்.

"முன்னாறும் கல்லாறும் தென்னர் ஓட
முன்னொருநாள் வான்அபயன் முனிந்தபோரில்
வெள்ளாறும் கோட்டாறும் புகையால்மூட
வெந்தவனம் இந்தவனம்ஒக்கில் ஒக்கும்"

என்று சோழ மன்னன் பெற்ற வெற்றிச் சிறப்பைக் கலிங்கத்துப் பரணி பாடிற்று. இவ்வாறு மாற்றார் படையெடுப்பால் எரிந்தும் இடிந்தும் நலிவுற்ற நகரம் பாழடைந்து போகாமல் அன்று போல் இன்றும் தலைநிமிர்ந்து நிற்பது நாஞ்சில் நாட்டாரது உறுதிப்பாட்டை நன்கு உணர்த்துவதாகும்.



# நீங்கள் போகுமிட மெல்லாம்

# கோடக்

## ஸ்னப்ஷாட்டுகளுக்கு அருமையான சந்தர்ப்பம் கிடைக்கும்

என்ன கூத்தும் கும்மாளமுமாயிருந்தது அந்த பிக்னிக்! அச்சந்தர்ப்பத்தில் எடுத்த 'கோடக்' ஸ்னப்புகள் மூலம் அந்த இன்பத்தை மீண்டும் நினைத்த போதெல்லாம் நீங்கள் பருகமுடியும் என்பது வியக்கத்தக்கதே—வெளியே எங்கு போவதாயினும் உங்கள் காமிராவையும் கூடவே எடுத்துச் செல்லுங்கள். கூட, ஞாபகமாக 'கோடக்' பிலிம் ரோலகளும் போதிய அளவு கையிலிருக்கட்டும்.




**வெரிக்ரோம்:** வெளிக்காட்சிவேலை சகஜமான வெளிச்சத்தில் எந்த காமிராவைக் கொண்டும் எடுப்பதற்கு உகந்த பிலிம் இது.




**ப்ளஸ் - X :** விளக்கமான பெரிய என்லார்ஜ்மென்டுகள் தரவல்ல தெளிவான படங்கள் எடுப்பதற்கு மிகச்சிறந்தது.




**சூப்பர் - X X :** துரிதமான செயல் காட்சிகளுக்கும், மங்கிய வெளிச்சத்தில் அல்லது வீட்டிலும் படம்பிடிக்கவும் இசைவுற்றது.

## ஒவ்வொரு வகைப் படத்திற்கும் உகந்த ஒரு 'கோடக்' பிலிம் கிடைக்கும்.

கோடக் லிமிடெட்
(இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது)
பம்பாய் - கல்கத்தா - டில்லி
மதராஸ்

K 404

# பலமும், ஆரோக்கியமும் பெருக

உங்கள் சிற்றுண்டி வகைகளை ஓ. கே. வனஸ்பதியில் தயாரியுங்கள். அதில் ஒரு அவுன்ஸிற்கு 700 I.U. வைட்டமின் 'A' சத்து இப்பொழுது சேர்க்கப்பட்டிருக்கிறது.










## ஓ.கே. வனஸ்பதி

இப்பொழுது ஏர்-டைட் லீவர்-லிட் டின்களில் கிடைக்கும். இதனால் அது கடைசி அவுன்ஸ்வரை புதுமை மணம் கெடாமலும், சுத்தமானதாகவும் இருக்கிறது

காலியானதும், ஏர்-டைட் 'ஓ. கே.' லீவர்-லிட் டின்களை உங்கள் அடுப்பங்கரையில் சுகாதாரமான முறையில், சாமான்களைப் பத்திரப்படுத்திவைக்க உபயோகியுங்கள்.

தயாரிப்பவர்கள்

தி ஈஸ்ட் ஏஷியாடிக் கம்பெனி (இந்தியா) லிமிடெட், மதராஸ்.

EP.




அத்தியாயம் 2

## அன்பு வளர்த்தது

என் அருமைத் தாயார் அல்லிக் குளம் கிராமத்தில் வசித்து வந்தபோது எவ்வளவோ கஷ்டங்களுக்கு உள்ளாக நேரிட்டது. அத்தனையையும் பொறுத்துக் கொண்டு என்னை மிகவும் அன்பாக வளர்த்தார். அந்தச் சூழ்நிலையில் எப்படி அவரால் அத்தனை பொறுமையாக இருக்க முடிந்தது என்பதை நினைத்தால் மிக ஆச்சரியமாக இருக்கிறது. என்னுடைய அன்னை எனக்குச் சாதம் போட்டே வளர்க்கவில்லை. அவருடைய தன்னலமில்லாத தூய அன்பே என்னை வளர்த்தது.

என் அன்னை, இந்துவின் தாயார் சந்திரமணியைப் போலக் காதல் மணம் புரிந்து கொண்டவரல்ல. பிறந்ததே ஏழைக் குடும்பத்தில்தான். பத்து வயதில் என் தந்தைக்கும் அவருக்கும் விவாகம் நடந்ததாம். என் தந்தையான கந்தசாமி அவரை எப்போதும் அலட்சியமாகவே நடத்தி வந்ததை நான் பார்த்திருக்கிறேன். ஆரம்பத்தில் எப்படியிருந்தாரோ எனக்குத் தெரியாது. நான் அதைப் பற்றிக் கேட்டது கிடையாது. ஆனால் எனக்கு நினைவு தெரிந்த நாள் முதல் அவர் ஒரு நாளாவது வீட்டில் சத்தம் போடாமலிருந்தது கிடையாது. அவர் என்ன சொன்னாலும் என் அன்னை வாய் திறக்க மாட்டார். அவர் சென்ற பிறகு மௌனமாகக் கண்ணீர் உகுப்பார். அல்லது என்னை அழைத்துப் பக்கத்தில் வைத்துக் கொண்டு, ''துரை! உன்னைத்தான் நான் நம்பியிருக்கிறேனடா. நீ சீக்கிரம்

பெரியவனுகி விடக் கூடாதா?" என்று சொல்லுவார்.

நானும், "நீ தினமும் நிறையச் சாதம் போடு, அம்மா! நான் சீக்கிரம் பெரியவனுகி விடுவேன். அப்புறம் பெரிய வேலை பார்ப்பேன்" என்பேன் மகிழ்ச்சியோடு.

அதைக் கேட்டதும் அவர் பூரித்துப் போய் என்னைக் கட்டியணைத்து உச்சி முகர்வார். என்மீது வைத்திருந்த அசைக்க முடியாத நம்பிக்கையில்தான் அவர் உயிர் வாழ்ந்தார் என்று சொல்ல வேண்டும்.

இத்தகைய அன்பு மயமான அன்னைக்கு நேர் விரோதமாக இருந்தார் என் தந்தை. அவர் மகா கோபக்காரர். சீட்டாடுவதுதான் அவருக்கு முக்கியமான வேலை. நிலங்களைக் குத்தகை எடுத்துப் பயிரிடுவது இரண்டாவது வேலை. ஆனல் அவரைக் குற்றம் சொல்லியும் பயனில்லை. வறுமை அவரைச் சீட்டாடச் செய்தது. அதில் பணம் சேர்த்து விடலாம் என்ற நம்பிக்கை, அவரை மேலும் மேலும் அந்த வலையில் கொண்டு போய் நன்றாகச் சிக்க வைத்து விட்டது. அதன் பிறகு அதிலிருந்து விடுவித்துக் கொள்ளவே முடியாமல் அதில் அழுந்திப் போய் விட்டார்.



குத்தகைப் பணம் கட்டியது போகப் பாக்கியுள்ள பணம் அநேகமாகச் சீட்டாட்டத்தில் தொலைந்துவிடும். அபூர்வமாக எப்போதேனும் ஜெயிப்பதும் உண்டு. அவர் முகத்தில் சிரிப்பைக் கண்டால் என் தாயாருக்கு அவர் அன்று சீட்டாட்டத்தில் ஜெயித்திருக்கிறார் என்று தெரிந்து விடும். என்னிடமும் "என்ன துரை! நல்லாப் படிக்கிறயா?" என்று கேட்பார். அதற்குமேல் அவர் அன்பு காட்டி நான் அறிந்ததில்லை.

அல்லிக்குளம் கிராமத்தில் வசித்து வந்த மற்றக் குடும்பத்தினருக்கெல்லாம் என் அன்னையைக் கண்டால் ஒரு அலாதியான பிரியம். ஒருமுகமாக அனைவரும் "பாவம், நல்லவள்!" என்பார்கள்.

அந்த நல்ல பெயரினல்தான் நாங்கள் அந்த ஊரில் காலந் தள்ள முடிந்தது. கடன் பெருகி யிருந்தபோதிலும் என் அன்னையை உத்தேசித்துக் கடனைத் திருப்பிக் கேட்டு நெருக்காமலிருந்தனர் அந்த ஊர்க்காரர்கள்.

குத்தகை நிலத்தைச் சரியாகக் கவனித்துத் தண்ணீர் பாய்ச்சி, கண்ணுங் கருத்துமாகப் பாதுகாத்தால்தானே, நிலச் சொந்தக்காரருக்குக் கொடுப்பது போக லாபம் வரும்? அவர் அப்படிச் செய்ய மாட்டார். என் அன்னை எவ்வளவோ சொல்லிப் பார்த்தார். கேட்கவில்லை. சொந்தக்காரருக்குக் கொடுக்க வேண்டிய அளவுக்கே விளைச்சல் இருக்காது. இதைக் கண்ட என் அன்னை தானே சென்று கவனித்து வரலானர்.

அப்போதெல்லாம் அவருடன் நானும் போவேன். பள்ளிக்கூடம் விட்டுத் திரும்பியதும் நேரே வயலுக்குச் செல்வேன். என் அன்னை அங்கே வேலையாக இருப்பார். அவருடன் சேர்ந்து வீட்டுக்கு வருவேன்.

அவர் என்னிடம் பேசிக் கொண்டே வருவார். "நல்லாப் படிச்சயா ராஜா?"




என்பதுதான் எப்போதும் அவரது முதல் கேள்வியாக இருக்கும்.

"படிச்சேன், அம்மா! வாத்தியார் வீட்டுக் கணக்குக் கொடுத்திருக்கார். தமிழ்ப் பாடம், இங்கிலீஷ் பாடம் இரண்டும் எழுத வேண்டும்."

"வீட்டுக்குப் போனதும் நேரத்தை வீணாக அடிக்காமல் முதலில் அதைச் செய்து விடு. பிறகு விளையாடப் போகலாம்" என்பார்.

"அம்மா நாளைக்கு லீவு போட்டு விட்டு உன்னோடே நானும் வந்து வயல்லே வேலை செய்யறதைப் பார்க்கிறேன், அம்மா!"

"ஐயையோ! கூடவே கூடாது! உன்னை நம்பித்தாண்டா நான் உயிரை வச்சிண்டிருக்கேன். நீ பேசாமல் படி. இந்த வேலை யெல்லாம் உனக்காகத்தானே நான் செய்யறேன், கண்ணு! நீ படித்துப் பெரிய உத்தியோகம் பார்ப்பாய். எனக்கு நீ சம்பாதிக்க ஆரம்பித்து விட்டால் பிறகு என்ன கவலை?" என்பார்.

என் மனத்திலும் உடனே பெரிய கோட்டைகள் எழுந்து விடும். நான் ஒரு ஆபீஸராக இருக்கிறேன். கூப்பிட்டால் உடனே ஓடி வர இரண்டு ஆட்கள் நிற்பார்கள். பங்காவை ஒரு சேவகன் இழுப்பான். நல்ல மேஜை நாற்காலிகள் இருக்கும். நான் புதிய துணிமணிகள் உடுத்திக் கொண்டிருப்பேன். கையில் கடிகாரம் கூடக் கட்டிக் கொண்டிருப்பேன். என் முன்னால் அடுக்கடுக்காகக் காகிதங்கள் இருக்கும். அவற்றிலெல்லாம் ரூ. அ. பை. கணக்குகளும், உத்தமப் பொது அளவு, அதமப் பொது மடங்கு கணக்குகளும் போட்டுப் போட்டுத்

தன்னுவேன். என்னுடைய மேலதிகாரி வந்து, ''பேஷ்! ரங்கதுரை! இன்று நிறையக் கணக்குப் போட்டிருக்கிறாய். எல்லாம் சரியாக இருக்கிறது. உனக்கு இருபது ரூபாய் சம்பளம் உயர்த்தி இருக்கிறேன்'' என்பார். உத்தியோகங்களைப் பற்றி எனக்கு இவ்வளவு தான் தெரியும். அது எந்தவிதமான உத்தியோகமானாலும் சரி.

சம்பளம் உயர்ந்ததும் அம்மாவுக்குப் பட்டுப் புடவைகள் வாங்கிக் கொடுப்பேன், நல்ல வீட்டில் வசிப்போம் என்றெல்லாம் எண்ணங்கள் வானளாவப் பரவி நிற்கும். இந்தக் கனவுகளிலிருந்து நான் விழித்துக் கொள்வதற்கு வெகு நாட்களாயின.

அல்லிக்குளம் மிக அழகான கிராமம். குங்குமத்துறை மாதிரி மலை சூழ்ந்த பிரதேசமன்று. ஆயினும் மண் வளம் மிக்க பூமியாதலால் எங்கும் பச்சைப் பசேலென்று கண்ணுக்குக் குளுமையாக இருக்கும். அல்லது, தான்ய லக்ஷ்மி வயல்களில் கிளி, மைனா, தூக்கணாங் குருவி, சிட்டுக் குருவி முதலிய செடிப் பெண்களுடனும், அணில், முயல், எலி, மண்டூகம் முதலிய சேவகர்களின் காவலுடனும் கொலுவிருப்பாள். அந்த அழகுக்கு ஏதேனும் ஈடாகுமா?

அல்லிக் குளத்தில் உண்மையாகவே ஒரு குளம் இருந்தது. சிவன் கோவிலுக்கு அடுத்தாற் போல் இருந்த அந்தக் குளத்தில் விடியற்காலை நேரங்களில் 'வானத்து நட்சத்திரங்கள் எல்லாம் பூமிக்கு வந்து இந்தக் குளத்தில் ஸ்நானம் செய்கின்றனவோ' என்று நினைக்கும்படி அல்லி மலர்கள் பூத்து மண்டிக் கிடக்கும்.

குளத்தங்கரையிலிருந்த பூவரச மரம் அதற்குப் போட்டியாகப் பூக்களைச் சொரிந்து நிற்கும். களி மண்ணினால் சின்ன உருண்டை செய்து அதற்கு முகம் எழுதிப் பூவரசம்பூவில் ஈர்க்குச்சியால் பொருத்தி மஞ்சள் பாவாடை உடுத்தி விடுவேன். அது எனக்கு எவ்வளவு சந்தோஷமாக இருக்கும் தெரியுமா? அந்தக் காலத்தை நினைத்தாலே இன்பமாக இருக்கிறது. 'ஏன் வளர்ந்து பெரியவனானேனும்? அப்படியே இருந்திருக்கக்கூடாதா' என்று தோன்றுகிறது.

கூடாது! கூடாது! அப்படியே இருந்திருந்தால் இந்துவின் காதலைப் பெற்றுப் பெருமிதமடைந்திருக்க முடியுமா? அவளுக்காக ஏங்குவதில், அவளை நினைத்து உருகுவதில் ஏற்படும் துயரச் சாயை படிந்த இன்பத்தைத் நான் தான் அனுபவித்திருக்க முடியுமா?



ஆனால், என்ன இருந்தாலும் இந்துவுக்கு இப்படி ஒரு கதி நேர்ந்திருக்க வேண்டாம். அவள் பட்ட கஷ்டமெல்லாம் போதாதா? சிறையில் வேறு இருக்கும்படி நேர வேண்டுமா? அவள் மனம் என்ன பாடு படுகிறதோ?

திரும்பத் திரும்ப என் நினைவு இந்துவைச் சுற்றிச் சுற்றி வருவதால் நான் எழுத ஆரம்பித்த விஷயத்தைத் தொடரவே முடியவில்லை. எப்படி ஆரம்பித்தாலும் இந்துவிடமே வந்து முடிகிறது. அவளை மறந்து இதை எப்படி என்னால் எழுத முடியும்?

இந்துமதியின் அழகிய சோகம் ததும்பும் விழிகள், ஜீவகளை நிறைந்த பார்வை, என் கண்முன் எப்போதும் நின்று கொண்டிருக்கின்றன. அவள் சினிமா வானில் சுடர் வீசிப் பிரகாசித்ததற்குக் காரணம் அவளுடைய உணர்ச்சிகளைப் பொழியும் கண்கள் தான் என்று சொல்ல வேண்டும். கன்னங் கரேலென்ற நீண்ட இமைகளை அவள் மலர விரித்துப் பார்க்கும் போது, என் இதயத்தையே ஊடுருவிப் பார்ப்பது போலிருக்கும்.

# 'அனஸின்'

வில்லைகளில் கலந்துள்ள **நான்கு**
மருந்துகளால் உங்கள் வலியை
நிவர்த்தி செய்து கொள்ளுங்கள்.

'அனஸின்' விஞ்ஞான முறைப்படி சேர்க்கப்பட்ட நான்கு மருந்துகளின் கலப்பாகும். அவை நரம்புகளின் முக்கிய சேர்க்கை பாகங்களில் கூட்டாக வேலைசெய்து விரைவில் வலி, தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி, மற்றும் தசைநார்களில் நோவு இவற்றை நீக்கும்.

WILL NOT UPSET THE STOMACH
DOES NOT HARM THE HEART
ANACIN
TABLETS
2 ANNAS
INDIA

அனஸினில் அடங்கிய மருந்துகள் :—

1. கொயினா: ஜுரத்தடுப்புகுணமும், பலவிருத்தி செய்வதற்கும் பிரசித்தி பெற்றது. ஜுரத்தை குறைப்பதில் மிகத் துரிதமானது.
2. காப்பின்: பலஹீனத்திற்கும், மனச்சோர்வுக்கும் மிதமான தூண்டுகோல் மருந்தாக விதிக்கப் பட்டிருக்கிறது.
3. பினஸிடின்: ஜுரத்தடுப்பு, வலி நிவாரணத் தன்மைகளுக்கு பெயர் பெற்றது.
4. ஆஸிடில்ஸாலிஸிலிக் ஆஸிட்: தலைவலி அது போன்ற எல்லா வலிகளையும் நிறுத்துவதற்கு உபயோகமுள்ளது.

அனஸினிலுள்ள இந்த நான்கு மருந்துகளும் ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பாகும். 'அனஸின்' இருதயத்திற்கு தீங்கு விளைவிப்பதோ அல்லது வயிற்றுக்கு கோளாறு உண்டாக்குவதோ கிடையாது. வலி, தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல் வலி மற்றும் தசைகளில் வலி முதலியவற்றிலிருந்து விரைவிலும், பத்திரமாகவும், நிச்சயமாகவும் நிவாரணம்பெற எப்பொழுதும் அனஸினையே கேட்டு வாங்குங்கள்.

**லக்ஷக்கணக்கான மக்களுக்கு நிவாரணம் அளிக்கின்றது.**

A. 44

எத்தனையோ சூழ்ச்சிகளுக்கும், பொறுமைகளுக்கும், வேதனைகளுக்குமிடையே உழன்றும் அவள் பரிசுத்தமான மனத்தில் சிறிதும் கறை படியவே இல்லை. அந்தக் கண்ணாடியை ஒத்த மனத்தில் தூசி படியவே படியாது. இதை நினைக்கும் போதுதான் அவள்மீது எனக்கு அன்பு பொங்கி வருகிறது.

இந்துவைச் சற்று மறந்து என் குழந்தைப் பருவத்தில் நடந்த சம்பவங்களை எழுத முயற்சிக்கிறேன்.

என் அன்னை குத்தகை நிலங்களுக்குச் சென்று மேற்பார்வை பார்த்து வந்தாரல்லவா? அதுவும் ஒரு நாள் நின்று விட்டது.

ஒருநாள் அப்பா வரும்போதே கோபமாக வந்தார். படித்துக் கொண்டிருந்த நான் அவரைக் கண்டதும் புத்தகத்தை ஒளித்து வைத்து விட்டுப் படுத்துக் கொண்டு விட்டேன். சில சமயம் என் புத்தகங்கள் அவருடைய கோபத்துக்குப் பலியாவதுண்டு. கிழித்து எறிவாரே தவிர வாங்கித் தர மாட்டார்.

அன்று அவர் என் அன்னையைக் கூப்பிட்ட போதே என் கதி கலங்கி விட்டது.

"நீ ஏன் குத்தகை நிலத்துக்குப் போனாய்?" என்று உறுமினார்.

"யாராவது போய்க் கவனிக்க வேண்டுமல்லவா? முனிசாமி எல்லோரும் சரியாக வேலை செய்கிறார்களா என்று பார்க்கப் போனேன்."

"என்னைச் சோம்பேறின்னு குத்திக் காட்டறியா?" என்றார் அவர்.

"அப்படியெல்லாம் சொல்லவில்லையே. இன்னிக்குத் தண்ணி சரியாய்ப் பாய்ச்சி, களை பிடுங்கினாத்தானே நாளைக்கு நன்றாக விளையும். குத்தகைப் பணம் கொடுத்து மிஞ்ச வேண்டாமா? நன்றாக அவர்கள் வேலை செய்ய வேண்டுமே என்ற கவலையால் போனேன்."

"இதைப் பாரு! உன்னாலே என் கௌரவமே இன்னிக்குப் பாழாய்ப் போச்சு. என்னை எல்லாரும் பரிகாசம் பண்ணுகிறார்கள். 'பெண்டாட்டி கவனித்துக் கொள்கிறாள். இவனுக்கென்ன கவலை?' என்று சொல்லிக் காட்டுகிறார்கள். இனிமேல் அந்தப் பக்கம் போனாயோ, அவ்வளவுதான்! மறுபடியும் இந்த வீட்டிலே காலடி எடுத்து வைக்கக் கூடாது!" என்றார்.

என் அன்னை, "இனிமேல் போகவில்லை" என்று பேச்சை உடனே முடித்து விட்டார். ஆனால் என் தந்தை சென்ற பிறகு அவர் குமுறிக் குமுறி அழுததை நான் பார்த்தேன். அப்போது எனக்கு என்ன கோபம் வந்தது தெரியுமா? என் தந்தைமீது வெறுப்பு உண்டாகி விட்டது. நான் சீக்கிரம் பெரியவனாகி என் அருமை அன்னையை இந்தக் கஷ்டத்திலிருந்து காப்பாற்ற வேண்டும் என்று நினைத்தேன். சற்றைக்கெல்லாம் அவர் எழுந்து வந்து என் அருகில் உட்கார்ந்து கொண்டு, "கண்ணு! நீ தினமும் பள்ளிக்கூடம் விட்டதும் வழக்கம் போல நிலத்தைப் பார்த்துவிட்டு வந்து சமாசாரம் சொல்கிறாயா?" என்றார். அப்போது நான் அடைந்த பெருமை சொல்ல முடியாது. என் தாயாருக்கு ஒரு முக்கியமான உதவி செய்யப் போகிறோம் என்ற எண்ணம் எனக்கு மிக மகிழ்ச்சி அளித்தது. அவருடைய கஷ்டத்தைத் தீர்த்து விட்டதாகவே கற்பனை செய்து கொண்டேன். பாவம்! அவருடைய கஷ்டங்களை நான் தீர்க்கவே போவதில்லை என்று நான் கண்டேனா?

## அத்தியாயம் 3

# அன்னையின் விருப்பம்

அது முதல் தினமும் அந்த வேலைகளை நான் பார்த்து வந்தேன். ஆனால் சிறுவனான எனக்கு என்ன தெரியும்? ஏதோ நடந்து வந்தது. அந்த வருஷம் விளைச்சல் ரொம்பக் குறைவு. ஆனால் என் தந்தைக்குக் கடன் ஏறியிருந்தது. என் அன்னை என்ன செய்வார் பாவம்! எனக்குப் பள்ளிக்கூடச் சம்பளம் வேறு கட்டியாக வேண்டும்.

பள்ளிக்கூடத்திலோ தலைமை உபாத்தியாயர் இரண்டு மாதச் சம்பளம் கட்டாவிட்டால் வகுப்புக்கு வரக் கூடாதென்று கூறி விட்டார். நான் அம்மாவிடம் இதைச் சொல்லவே பயந்தேன். சொன்னால் அவர் மனமிடிந்து போய் விடுவார். என்ன செய்வதென்று புரியாமல் தத்தளித்தேன்.

ஒரு நாள் பள்ளியிலிருந்து திரும்பி வரும்போது குத்தகை நிலத்தைப் பார்க்கச் சென்றேன். அங்கே என் தந்தை நின்று கொண்டிருந்தார். அவரைப் பார்த்ததும் எனக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது.

'இவரல்லவா என் பள்ளிக்கூடச் சம்பளத்தைப் பற்றிக் கவலைப் பட வேண்டும்? பாவம்! அம்மா என்ன செய்வாள்?" என்ற நினைப்புடன் அவர் அருகில் சென்றேன்.

என் தைரியத்தையெல்லாம் சேர்த்துக் கொண்டு, "அப்பா! பள்ளிக்கூடச் சம்பளம் கட்டணும். வாத்தியார் பணம் உடனே கட்டா விட்டால் பள்ளிக்கூடத்துக்கே வரக்கூடாது என்கிறார், அப்பா!" என்றேன்.

"போக வேண்டாமே."

எனக்குக் குபீரென்று அழுகை பொங்கிக்கொண்டு வந்தது.

"என்னடா அழறே? நீ பள்ளிக்கூடம் போகாவிட்டால் குடி முழுகிப் போய் விடுமோ? அவ்வளவு அக்கறை இருந்தால் வேலை செய்து சம்பாதித்துப் பணம் கட்டேன்."

"பள்ளிக்கூடத்துக்கு இப்போ போகா விட்டால் பரீட்சை எழுத முடியாது. ஒரு மாதச் சம்பளமாவது கொடுங்கள், அப்பா!" என்று கெஞ்சினேன்.

என் தந்தை என் அருகில் வந்தார். காதை முறுக்கிப் பிடித்துக் கொண்டார். நான் துடித்தேன். அப்படியே இழுத்துக் கொண்டு வீட்டுக்குப் போனார்.

"வேண்டாம், அப்பா! பணம் வேண்டாம். என்னை விட்டு விடுங்கள். அம்மாவுக்குத் தெரிய வேண்டாம்" என்று அழுதுகொண்டே கூறினேன்.

அவர் கோபம் இன்னும் அதிகரித்தது. வீட்டு வாசல் வரை காதைப் பிடித்தே இழுத்துக் கொண்டு போனார்.

என் அன்னை, எதற்காகவோ வாசல் பக்கம் வந்தவர் இதைப் பார்த்துத் திகைத்து நின்றார். சொல்ல முடியாத வேதனை அந்த முகத்தில் பிரதிபலித்தது. வேகமாக ஓடிவந்து என் தந்தையின் கையை உதறி விட்டு என்னை அணைத்தவாறு வீட்டுக்குள் அழைத்துச் சென்றார். நான் விம்மி விம்மி அழத் தொடங்கினேன். அம்மா பேசவே இல்லை. அவர் கண்களிலிருந்து நீர் தாரை தாரையாகக் கொட்டியது.

கோபத்துடன் உள்ளே வந்த அப்பா, "பள்ளிக்கூடச் சம்பளம் வேணுமாமே சம்பளம். உதைக்கணும் நன்னா. உன்னாலேதான் அவன் இப்படித் துளுத்துப் போகிறான்" என்றார்.

"ஏன்? குழந்தை சம்பளப் பணம் கேட்டதிலே என்ன தப்பு? இஷ்டமிருந்தால் கொடுக்கிறது. இல்லா விட்

# ஹாஸ்யக் களஞ்சியம்

## வியாபாரமும் வாழ்க்கையும்!









டால் பேசாமல் இருக்கிறது. குழந்தையை இப்படிப் பாடு படுத்துவானேன்?'' என்றார் என் அன்னை. சாந்தமே உருவான அவருக்குக் கூட அன்று கோபம் வந்து விட்டது.

"படிப்பு ரொம்ப முக்கியம்தான். பணத்தை இரைத்துப் படிக்க வைத்தால் பெரிய வக்கீலாகவும், ஜட்ஜாகவும் வேலை பார்த்து விடப் போகிறானாக்கும். உன்னைத் தூக்கிச் சிம்மாசனத்தில் உட்கார வைத்து விடுவான். மாடு மேய்க்கக்கூட லாயக்கில்லாத பயலுக்குப் படிப்பென்ன, படிப்பு?'' என்று கூறி விட்டுப் போய் விட்டார்.

காது விண்விண்ணென்று தெறித்தது. ஆனால் மனத்தில் விழுந்த அடி அதை விட அதிகமாக வலித்தது. அப்பா போனதும் அம்மாவின் மடியில் படுத்து விசித்தேன். என் தாயாரும் கண்ணீர் விட்டார். பிறகு தன் கண்களைத் துடைத்துக்கொண்டு என்னைத் தேற்றினார்.

"துரை! நீ என் அப்பாவிடம் போய்ச் சம்பளம் கேட்டாய்? என்னிடம் சொல்லுவதற்கென்ன?'' என்று கேட்டார்.

"உன்னிடம் பணம் இல்லை என்று எனக்குத்தெரியாதா, அம்மா! உன்னிடம் சொன்னால் நீ வருத்தப்படுவாய் என்று சொல்ல வில்லை. அப்பாகிட்டே கேட்டுத் தான் பார்க்கலாமே என்று கேட்டேன்'' என்று விம்மலுக்கும், விசும்பலுக்கும் இடையே கூறினேன்.

"கண்ணா! நீ அழாதே. நான் நாளைக்கு எப்படியாவது சம்பளம் கட்டி விடுகிறேன்'' என்று கூறினார்.

எனக்கு. அதில் உற்சாகமே உண்டாக வில்லை. அப்பா கூறியதுதான் இன்னும் மனத்தில் எரிந்து கொண்டிருந்தது.

"அம்மா! நான் மாடு மேய்க்கக் கூட லாயக்கில்லாதவனா?'' என்று கேட்டேன்.

அம்மா என் முகத்தை நிமிர்த்தினார். "துரை! இது என்ன அசட்டுக் கேள்வி? நீ ரொம்பக் கெட்டிக்காரன் என்று எனக்குத்தெரியும். அப்பாவுக்கும் தெரியும். ஏதோ நமது போதாத காலம் இப்படியெல்லாம் தவிக்க வேண்டியிருக்கிறது. நீ ரொம்ப நன்றாகப் படிக்கப் போகிறாய். காலேஜில் படிப்பாய். பிறகு நிஜமாகவே வக்கீல் வேலையோ









ஜட்ஜ் வேலையோ பார்ப்பாய். அப்போது பாரேன், அப்பாவை. அவர் அப்படியே பெருமைப் பட்டுக் கொள்வார்."

"வேண்டாம். அப்பா ஒன்றும் என்னைப் பார்த்துப் பெருமைப் பட வேண்டாம். அவர்தான் என் காதைப் பிடித்துத் திருகினாரே!"

"அப்படிச் சொல்லக்கூடாது,கண்ணு! அப்பாவிடம் நீ மரியாதையாக இருக்க வேண்டும்" என்றார் அம்மா.

பிறகு, பாவம், எப்படியோ பள்ளிக் கூடத்துக்குச் சம்பளம் கட்ட மறுநாளே பணம் சேர்த்துக் கொடுத்து விட்டார். அதைக் கொடுக்கும்போதுதான் அவர் முகத்தில் என்ன பெருமை? என்ன நம்பிக்கை? அது அல்லவா அதிசயம்? நான் பத்து வயதுச் சிறுவனாக இருந்தபோது என்னை அவ்வளவு நம்பினாரே! அந்த நம்பிக்கைக்கு ஏழு உலகங்களையும் கொடுக்கலாமே! அவரைப் பற்றிய மற்ற எல்லா நினைவுகளையும் விட அதுதான் என் நெஞ்சை விட்டு அகலமாட்டேனென்கிறது.

சம்பளம் கட்டிய பிறகு மிகத் தீவிரமாகப் படித்தேன். பள்ளிக்கூடத்தில் நடந்த கட்டுரைப் போட்டியில் முதல் பரிசு பெற்றேன். என் அன்னை அப்போது அடைந்த சந்தோஷத்தை நினைத்தாலே இப்பொழுது கூட மிகவும் பெருமையாக இருக்கிறது.

விளையாடுவதில் எனக்கு அதிகப் பிரியம் என்றாலும் விளையாடப் போக மாட்டேன். எப்போது பார்த்தாலும் படித்துக்கொண்டே இருப்பேன். இதற்காக என் நண்பர்கள் எல்லோரும் என்னைப் பரிகசிப்பார்கள்.

வருஷாந்திரப் பரீட்சையில் நான் முதல் வகுப்பில் தேறியபோது என் தாயார் அடைந்த சந்தோஷத்துக்கு அளவே இல்லை. "எனக்குத் தெரியும், ரங்கதுரை என் நம்பிக்கையைப் பாழாக அடிக்கமாட்டான் என்று. கெட்டிக்காரன்" என்று வந்தவர்களிடமெல்லாம் கூறி மகிழ்ந்தார். நானும் ஜட்ஜ் உத்தியோகமே ஆகிவிட்ட மாதிரி மகிழ்ந்தேன். அந்த வருஷம் எனக்கு உபகாரச் சம்பளம் கிடைத்தபோது, மிக அதிகமான மகிழ்ச்சி அடைந்தது நானா, அம்மாவா, அல்லது அப்பாவா என்று யாராலும் சொல்ல முடியாது.

பரீட்சையில் தேறியதும் விடுமுறை நாட்கள் வந்தன. என் அன்னைக்கு அப்போது உடம்பு ரொம்பவும் சரியில்லாமல் இருந்தது.

அவர் என்னை அழைத்துப் பக்கத்தில் உட்காரச் சொன்னார். உட்கார்ந்தேன். உடம்பு சரியில்லாமல் கஷ்டப்பட்ட பொழுது கூட அவர் முகத்தில் பிரகாசம் போகவில்லை. என்னைப் பார்த்து, "துரை, எனக்கு நீ ஒரு வாக்குறுதி கொடுக்க வேண்டும்" என்றார்.

"என்னம்மா, இப்படிக் கேட்கிறாய்? நீ என்ன சொன்னாலும் செய்கிறேன், அம்மா!" என்றேன்.

"நீ முதல் வகுப்பில் தேறியிருப்பதை நினைத்தாலே எனக்குச் சந்தோஷமாக இருக்கிறது. நீ ரொம்பக் கெட்டிக்காரன் என்று எனக்குத் தெரியும். நீ வாழ்க்கையில் மிகவும் முன்னுக்கு வருவாய். அதைப் பார்த்து மகிழ்வேன் என்றுதான் இதுவரை எண்ணியிருந்தேன். ஆனால் இப்போது என் உடம்பு ரொம்பத் தளர்ந்து போய் விட்டது. அதனால் உடனே நான் செத்துப் போய் விடுவேன் என்று சொல்லவில்லை. நீ கவலைப்படாதே. நெருப்பு என்றால் வாய் வெந்து போய் விடுமா? என் மனத் திருப்திக்காகச் சொல்கிறேன். நான் இருக்கும் வரை நீ நன்றாகப் படிப்பாய். அது எனக்குத் தெரியும். ஒரு வேளை எனக்கு ஏதாவது நேர்ந்து விட்டாலும் நீ மனம் குன்றாமல் படித்து வர வேண்டும். அதுதான் என் ஆசை. உன் அப்பா உன்னைப் படிக்க விட மாட்டார். பணமும் தர மாட்டார். ஆனாலும் நீ எப்படியாவது உபகாரச் சம்பளம் பெற்றாவது படித்துவிட வேண்டும். இந்த வாக்குறுதி எனக்குத் தருவாயா? இதை மறக்காமலிருப்பாயா?" என்றார்.

"அம்மா, உன் ஆசையைக் கட்டாயம் நிறைவேற்றுவேன். ஆகவே அதைப் பற்றி நீ கவலைப்பட வேண்டாம். உன் உடம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ள வேண்டும். அதுதான் எனக்கு மிகவும் கவலையாக இருக்கிறது" என்றேன்.

என் தாயார் மகிழ்ச்சியுடன் சிரித்தார். "நீ சொன்னதைக் கேட்டதுமே எனக்கு உடம்பு சரியாகி விட்டதடா, கண்ணு! உன்னை விட்டு விட்டுச் செத்துப் போக மாட்டேன். நீயாவது வாழ்க்கையில் கஷ்டப்படக் கூடாது என்பதுதான் என் ஆசை. அதை நீ எப்படியாவது நிறைவேற்ற வேண்டும்" என்றார்.

"நிச்சயமாய் நான் நன்றாகப் படிப்பேன் அம்மா!" என்று கூறினேன்.

அதன் பின் இரண்டு நாட்களுக்கெல்லாம் என் தாயாருக்கு உடம்பு சரியாகி விட்டது. மறுபடியும் முன் போல் என்னைக் கவனித்துக் கொள்ள ஆரம்பித்தார். சில நாட்கள் அமைதியாகச் சென்றன. அப்படியே வாழ்க்கை ஆற்றொழுக்கைப் போல் தவழ்ந்து சென்று விட்டால் வாழ்வில் ரஸம் ஏது?

பிராகுதார் சகுவரமூர்த்தி எங்கள் வாழ்க்கையில் குறுக்கிட்டு ரஸம் உண்டாகும்படி செய்தார். என்ன பயங்கரமான ரஸம் அது! (தொடரும்)

# டூமெக்ஸ் பால் உணவு விலையில் அதிகமானதா ?

இல்லை. கடைகளில் விற்கப்படும் எல்லாப் பால் உணவுகளின் விலையைப் போன்றே டூமெக்ஸ் பால் உணவும் விலையிடப்பட்டிருக்கிறது. பார்ப்பதற்கு டின் சிறியதாக காணப்பட்ட போதிலும் எடையில் சரியானது. இதிலுள்ள பால் உணவு வெகு சன்னமான மாவாக இருப்பதனுல் டின்னில் நிறைந்து இருக்கிறது. இது தண்ணீரில் வெகு சுலபமாகக் கரையக்கூடியது, குழந்தைகள் எளிதில் ஜீரணிக்கக்கூடியது.

டூமெக்ஸ் பால் உணவு டூபர்கொலின் டெஸ்டெட் பசுக்களின் பாலினின்றே தயாரிக்கப்படுகிறதென்பது குறிப்பிடத்தக்கது. இதில் விடமின்கள் அதிகமாகவும் கொழுப்புச் சத்து குறைவாகவும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. ஆகவே இது உங்கள் குழந்தைகளுக்கு வேண்டிய போஷாக்கு அளிக்கக் கூடியது. நிர்ப்பயமானதோடு மிகவும் பரிசுத்தமானது. ஆனுல் விலை அதிகமில்லை. குழந்தைகள் டூமெக்ஸ் பால் உணவை அருந்தி போஷாக்குடன் வளருவதில் சந்தேகமில்லை.

# டூமெக்ஸ்

## பால் உணவு

உங்கள் குழந்தைகளுக்கு டூமெக்ஸ் பால் உணவைக் கொடுத்து அவர்களது வளர்ச்சியைக் கவனியுங்கள்

# பேதமிலா அன்பு



சா.அ. அனந்த கிருஷ்ணன்

ராமு ஒருகணம் திகைத்துத் தான் போனான்.

'பெண் கறுப்பாக இருப்பதால் பையனுக்குப் பிடிக்க வில்லையாம்' என்ற அந்தச் செய்தி அவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. அதை அவன் எதிர்பார்க்கவே யில்லை.

பம்பாயில் அவன் வசித்து வந்த வீட்டுக்கு அடுத்த வீட்டில்தான் அவளும் இருந்தாள். அடுத்த வீட்டுக்காரன் என்ற முறையில் அவளுடைய குடும்பத்துடன் அவனுக்கு நெருங்கிய தொடர்பு உண்டு அவள் தந்தை கணேசய்யர் கூடப் பெற்ற பிள்ளையாகத்தான் அவனிடம் பழகினார்.

பதினைந்து நாட்களுக்கு முன்புதான் பார்வதியை யாரோ ஒரு வரன் வந்து பார்த்து விட்டுப் போனான். படித்துப் பட்டம் பெற்ற அவன் கோயமுத்தூரைச் சேர்ந்தவன்.

ஊருக்குப்போன பையன் வீட்டாரிடமிருந்து மேற்கொண்டு ஒரு கடிதமும் வரவில்லை. நாட்கள் பத்து, பன்னிரண்டு என்று ஓடின. பதினைந்து நாட்களுக்குப் பிறகு, 'வருமா, வருமா!' என்று காத்திருந்த கடிதம் வந்தது! அது கணேசய்யருக்குப் பேரிடியாக முடிந்தது.

* * *

'பெண் கறுப்பாம், பையனுக்குப்பிடிக்கவில்லையாம்.'

ராமுவின் வாய் இதைத் திரும்பத் திரும்ப முணுமுணுத்தது. கணேசய்யர் குடும்பத்துக்கு இது எவ்வளவு பெரிய ஏமாற்றம்! பார்வதி தான் எப்படி யெல்லாம் ஆசைக் கோட்டைகள் கட்டி யிருப்பாள்! அவள் மனம் இப்போது எப்படி உடைந்திருக்கும்!

மனக்குதிரை எங்கேயோ தாவிற்று. கறுப்பு, கறுப்பு என்ற சொற்கள் அவனுடைய எண்ணத்திலே அலை அலையாக மோதி அவனை அந்தக் காலத்துக்கு இழுத்துச் சென்றன. நினைவிலே அந்தத் துயரச் சம்பவம் விசுவரூபமெடுத்து அவன் இதயத்தை உதிரம் சொட்டச் சொட்டக் கசக்கிப் பிழிந்தது. நினைவு வேக நதியில் பின்னோக்கி ஓடிற்று.

இன்றைக்கு முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு கடத்தூர் வல்லப சர்மாவின் ஏக புதல்வனாக இந்தப் புவியில் அவன் ஜனனமானான். குலம் விளங்கப் பிள்ளைத் தவம் வேண்டிக் கிடந்த சர்மா பூரித்துப் போனார்.

குழந்தை ராமு மூக்கும் விழியுமாக இருந்தாலும், அட்டைக் கறுப்பாகத்தான் படைக்கப் பட்டிருந்தான்.

அவன் விவரமறியாக் குழந்தையாக இருந்த காலம் அது. அப்போதுதான் வாழ்க்கையில் துர்ப்பாக்கியம் அவனைப் படுத்த ஆரம்பித்தது.

இதற்கு முதற்படியாக அவனுடைய நாலு வயதிலே, அவன் அப்பா சர்மா மார்வலி என்று ஒரே இரவு படுத்து மறுநாள் இந்த உலகை நீத்தார்.

அவன் தாய் ஜானகம் வேறு போக்கிடமின்றி, கடத்தூரிலேயே இருந்த தன் தம்பி சீனுவிடம் குழந்தையும் தானுமாக அடைக்கலம் புகுந்தாள்.

சீனு தங்கமான குணமுடையவன். அக்காவுக்கு ஏற்பட்ட துயரம் அவனுக்குத் தாள முடியாத வருத்தத்தைத் தந்தது. கூடப் பிறந்தவள் என்ற பாசத்திலே அவளையும் ராமுவையும் போஷித்தான்.

இதிலே சீனுவின் மனைவி ராஜத்துக்கு அவ்வளவு பிடித்தம் இல்லைதான். இருந்தாலும் கணவன் பேச்சுக்காகக் கட்டுப்பட்டிருந்தாள்.

கிராமக் கர்ணம் என்பதால் சீனுவின் குடும்பத்தில் செழிப்பு இருந்தது. குறையேதும் இல்லாமல் மாமாவின் ஆதரவில் ராமு ஒழுங்காகப் படித்து வந்தான்.

அவனுக்குத் தோழியாக மாமாவின் பெண் சாரதா இருந்தாள். அவனைவிட இரண்டு மூன்று வயது இளையவள்.

இரண்டு பேரும் இணைபிரியாத செல்வங்களாக அந்த வீட்டில் வளைய வந்தார்கள்.

இரண்டு பேர்களின் சிரிப்பிலும் விளையாட்டிலும் அந்த வீடே கலகலவென்றிருந்தது.

குழந்தைகளாக இருந்தவர்கள் வளர்ந்து கொண்டிருந்தனர். கடந்தூர் எலிமெண்டரி பள்ளியில் அவன் எட்டாவது படித்துக் கொண்டிருந்தான். வாத்தியார் பையன் படிக்க மாட்டான் என்ற சொல்லுக்கு விலக்காக அவன் அற்புதமாகப் படித்தான். எந்தப் பாடத்திலும் பள்ளியிலேயே அவன் முதல் மாணவனாக விளங்கினான்.

அப்போதுதான் அவனுடைய வாழ்க்கையில் இரண்டாவது பேரிடி விழுந்தது. கிராமத்திலே மூண்டு விட்டிருந்த காலரா நோய் ஒரே வார காலத்தில் அவன் தாயை அள்ளிக்கொண்டு போயிற்று. அப்பா அம்மா இல்லாத அனாதையாகிவிட்ட அவனுக்கு மாமாதானே இனி அன்பும் ஆதரவும் காட்ட வேண்டும்! மாசற்ற அன்பின் அரவணைப்பிலே அவர் அவனை ஆதரிக்கத்தான் செய்தார்.

அந்த வயதிலே அவன் தன் துயரையெல்லாம் மறந்து மகிழ்ச்சியோடு வாழச் சாருவின் நேசம்தான் துணையாக இருந்தது. ஆனால் அவன் நான்காவது பாரம் படிக்கும்போது அவளுடைய தோழமையையும் இழக்கத்தான் நேரிட்டது.



அவள் ஏழாவது வரை கடந்தூரில்தான் படித்தாள். அதன் பிறகு அவளைக் கான்வெண்டில் படிக்க வைப்பதற்காகக் கோவையில் இருந்த தன் அண்ணா வீட்டுக்கு அனுப்பினாள் ராஜம். இதில் மாமா சீனுவுக்கும் சம்மதம்தான்.

சாரு அந்த வீட்டில் இல்லாதது ராமுவுக்குச் சொல்ல முடியாத வேதனையைத் தந்தது.

ஒவ்வொரு பரீட்சை விடுமுறையின் போதும் அவள் ஊருக்கு வந்து போவாள். அப்போதெல்லாம் அவனைக் கட்டிப் பிடிக்க முடியாது. சந்தோஷத்தால் பூரித்துப் போவான். அவளுடன் எவ்வளவோ பேசி, விளையாடத் துடியாய்த் துடிப்பான். அவளும் அப்படித்தான்.

கால வெள்ளத்தின் ஓட்டத்திலே இதிலும் அவன் மாற்றத்தைக் கண்டான். முதல் முறை வந்தபோது அவள் காட்டிய அன்பும், பரிவும், ஆசையும், அடுத்த முறை வந்தபோது இருக்கவில்லை. எப்படி மாறிப் போய் விட்டாள்! அவனுடைய நாலு வார்த்தைகளுக்கு ஒரு வார்த்தைதான் பேசினாள். காலம் அவளை மறைத்ததா! இல்லை, நகரத்து வாழ்க்கை அவளை மாற்றி விட்டதா!

ராமுவுக்கு ஒரே புதிராய் இருந்தது.

அந்த வருடமும் அப்படித்தான். அவள் எஸ். எஸ். எல். ஸி. பரீட்சை எழுதியிருந்தாள். பள்ளி விடுமுறையின்போது கோவையிலிருந்து சாரு ஊருக்கு வரும் நாளை அவன் ஆசையோடு எதிர்நோக்கிக் கொண்டிருந்தான்.

அன்று காலை வீட்டு வாசலில் ஜட்கா வண்டி வந்து நின்ற ஓசை கேட்டுத் திண்ணைக்கு ஓடோடியும் வந்தான். வண்டியிலிருந்து அவள் கீழே இறங்கினாள்.

அப்பா! எப்படி வளர்ந்து விட்டாள்!

பருவம் அவளைப் பதுமையாக்கி விட்டிருந்தது. அவள் தங்க மேனியில் அழகு பொங்கி வழிந்தது. கருநாகம் போல நீண்டிருந்த தனது இரட்டை ஜடைப் பின்னலை மார்பிலொன்றும், முதுகிலொன்றுமாக மோகனமாகப் போட்டுக் கொண்டிருந்தாள்.

சொல்லித் தீர்க்க முடியாத ஆசையோடும் ஆர்வத்தோடும் அவளை விழுங்கி விடுவதுபோல் பார்த்துக் கொண்டிருந்த ராமு 'சாரு' என்று ஆதுரத்தோடு கூப்பிட்டான்.

அவள் அவனைப் பார்த்தாள். நிலவைப் பழித்த அந்த முகத்தில், அவன் எதிர்பார்த்த முல்லைச் சிரிப்போ, கரிய விழிகளின் நேசப் பார்வையோ இருக்கவில்லை.

அவ்வளவுதான். அவனை லட்சியம் செய்யாதவள் போலச் சரேலென்று அவனைக் கடந்து வீட்டினுள் நுழைந்து விட்டாள்.

ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை.

ராமுவின் தலையிலே யாரோ பெரிய பாறாங் கல்லைத் தூக்கிப் போட்டது போலிருந்தது. ஏதோ ஒரு அதிர்ச்சியால் அவன் உடல் கிடுகிடுவென்று நடுங்கியது. அவனுக்கு அங்கு இருப்புக் கொள்ளவில்லை. துக்கம் நெஞ்சை அடைக்க நேராக அமராவதிக்கே ஓடி விட்டான்.

அமராவதி நதி அமைதியாக ஓடிக் கொண்டிருந்தது. அதன் போக்கும் வேகமும், சுழல் நிறைந்த அலைகளும் அன்று இல்லை. அவை தான் ராமுவின் இதயத்தில் புயலாக வீசினவே!

மேல்வகுப்பில் சின்னக் குழந்தைகளாகப் படித்துக் கொண்டிருந்தபோது அந்த நதிக்கரையில் அவளும் அவனும் விளையாடியதெல்லாம் ராமுவுக்கு இப்போது நினைவு வந்தது. அந்த நினைப்பு அவன் இதயத்தை மகிழ்ச்சியால் நிரப்பவில்லை; வேதனையால் நோகச் செய்தது.

தெளிந்திருந்த நதித் தண்ணீரில் தன் முகத்தை ஒரு முறை பார்த்துக் கொண்டான் ராமு. இளமையின் கவர்ச்சி நிறைந்த அவன் முகத்தில், ஒரு பெரும் நிழலாகக் கருமை யல்லவோ வியாபித்திருந்தது!

வயது வந்துவிட்ட சாரு இப்போதெல்லாம் தன்னுடன் முகம் கொடுத்துப் பேசவில்லையே; தன் கருமை அவள் கண்ணைக் குருடாக்கி விட்டதா! இல்லை, போக்கிடமில்லாத இந்த அனாதையை அவளுக்குப் பிடிக்கவில்லையா! ஐயோ! இதை அவன் எப்படிச் சகிக்க முடியும்!

அன்று இரவே அவன் அதையும் தெரிந்து கொள்ள நேரிட்டது.

# பிற்பாடு வீண் செலவு வேண்டாம்!

நல்ல சாப்பாட்டிற்குப் பிறகு தவறாமல் ஒரு டோஸ் மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பௌடரை அவசியம் சாப்பிட்டு விடுங்கள். மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பௌடர் உட்கொள்வதன் மூலம் அபாயகரமான அஜீரணமும், வேதனை தரும் இருதய எரிச்சலும், வயிற்றில் புளித்தேப்பமும் தவிர்க்கப்படுகின்றன. வேண்டிய உணவைச் சாப்பிடுங்கள். ஆனால் மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பௌடர் மட்டும் கைவசமிருக்கட்டும்!




**ஒரே டோஸ்**
**உடனடி நிவாரணம் தரும்!**

மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பௌடர், வயிற்று வலிகள், புளித்தேப்பம், இருதய எரிச்சல், வயிற்றுப்புளிப்பு, குமட்டல் முதலிய நோய்களை உடனே கண்டிக்கும். ஆனால் அசல் சரக்கைக் கவனித்து வாங்குங்கள். அதில் கீழ்க் குறித்த கையெழுத்து அச்சிடப்பட்டிருக்கும்.

விலை ரூ. 2/7
(உள்ளூர் வரிகள் பிரத்யேகம்)

# மக்ளீன்
பிராண்ட் ஸ்டமக் பௌடர்

MSY 13 TAM

சிறிய பாக்கெட்டுகள் மற்றும் குடும்ப சைஸ் ஜாடிகளிலும் கிடைக்கும்
(விலை ரூ. 1/4 & ரூ. 5/11; உள்ளூர் வரிகள் பிரத்யேகம்)

# பல்டாக்டர் அங்கீகரித்த இவ்வழியில் பற்சீதைவைத் தடுக்க முயலுங்கள்

**2-நிமிஷ கால்கேட் பழக்கத்தை 4,000க்குமேல் பல் டாக்டர்கள் அங்கீ கரிக்கின்றனர்**






✔ **இனிய சுவாசம்!**

✔ **ஒளிவீசும் பற்கள்!**

✔ **சொத்தைகுறைகிறது!**

...ஆம், இம்மூன்றையும் பெற கால்கேட் டூத் பவுடரை, வழக்கமாக உபயோகியுங்கள்!

- சாப்பிட்டவுடன் கால்கேட் டூத்பவுடரால் பிரஷ் கொண்டு 2-நிமிஷம் தேய்க்கவும்.
- பல்லின் முன்புறம், பின்புறம் நுனிபாகம் மூன்றையும் தேய்க்கவும்.
- எப்பொழுதும் ஈறிலிருந்து எதிர்த் திசையில் தேய்க்கவும்.

# கால்கேட் டூத் பவுடர்

TFG/15

இரவு பத்து மணிக்கு மேல் இருக்கும். கூடத்தில் படுத்திருந்த ராமு, தூக்கம் வராமல் படுக்கையில் புரண்டு கொண்டிருந்தான். அவன் நெஞ்சில், நினைவில் சாரு நிறைந்திருந்தாள்.

ராமுவின் சிந்தனையைத் தடைப்படுத்தியது, காமிரா அறையிலிருந்து கேட்ட பேச்சொலி. அங்குதான் அவன் மாமா, மாமி, அவள் மூன்று பேரும் படுத்திருந்தனர்.

பேச்சின் நடு நடுவே தன் பெயர் அடிபடுவதைக் கேட்ட ராமுவுக்கு, அவர்கள் பேச்சில் சிரத்தை விழுந்தது. படுக்கையிலிருந்து எழுந்தவன் காமிரா அறைக்கு அருகில் இருந்த முற்றத்தில் வந்து நின்று கொண்டான். பேச்சு இப்போது தெளிவாகக் கேட்டது.



சென்னை தியாகராய நகரில் உள்ள சாதனா சமாஜத்துக்கு விஜயம் செய்த தியானயோக அநுபவி ஸ்ரீ செங்காலிபுரம் குஹநாதன் அங்கு சில தினங்கள் தங்கி விருந்து, ஜப, தியான, பிரார்த்தனை மகிமை பற்றி அரிய உபன்யாசங்கள் செய்தார். அவரது உபதேசங்களையும் பழைய சம்பிரதாய சங்கீர்த்தனங்களையும் கேட்டுப் பல பக்தர்கள் மகிழ்ந்தனர். மேற்படி சமாஜத்தில் நடந்த கூட்டத்துக்குத் தலைமை வகித்த ஸ்ரீ கே. எஸ். ராமஸ்வாமி சாஸ்திரியார், குஹநாதன் அவர்களின் பக்தியையும் தன்னலமற்ற புனித சேவையையும் பாராட்டினார். ஸ்ரீ குஹநாதன், ஸ்ரீ ராமஸ்வாமி சாஸ்திரி, சாதனா சமாஜத் தொண்டர் ஸ்ரீ ஆர். நாராயணஸ்வாமி ஐயர் முதலிய பிரமுகர்களைப் படத்தில் காணலாம்.

“சாரு! நான் சொல்வதைக் கேள். இந்த ஒரு ஆசையிலேதான் அவனை என் ஆதரவில் இவ்வளவு காலம் வளர்த்துப் படிக்க வைத்தேன். என் கண்குளிர அவன் உன் கழுத்தில் முடிச்சுப் போட்டு விட்டால், கர்ணம் வேலையை அவனிடம் ஒப்படைத்து விட்டு நான் சிவபுலன்களைப் பார்த்துக் கொண்டிருப்பேன்.” மாமாவின் இந்தப் பேச்சு முடிவதற்கு முன்பாகவே, மாமி இடைமறித்தாள்.

“போதும் உங்கள் பேச்சு. கிளியையும்—ஆந்தையையும் ஒன்றாக இணைத்து உங்கள் மனம் குளிர்ந்தால் போதுமா! என்னுடைய அண்ணாவின் பிள்ளை இருக்கிறான், ராஜாமாதிரி. சாருவுக்கு நூற்றுக்கு நூறு ஒப்பானவன். படிப்பு அந்தஸ்து எதிலும் அவனுக்குக் குறையில்லை. அனாதை என்று ஆதரவு காட்டினவனையா என் பெண்ணோடு அம்மி மிதிக்கச் செய்ய வேண்டும்! இதற்கு ஒருபோதும் நான் உடன்பட முடியாது” — நெஞ்சில் கனன்று கொண்டிருந்த துவேஷம் அனலாக வெளி வந்தது, மாமியின் பேச்சில்.

விஷயங்களை ஒருவாறு புரிந்துகொண்ட ராமு இப்போது அவள் பேச்சை மிகுந்த ஆர்வத்தோடு கேட்டான்.

“எல்லாரும் என்னைக் கேலி செய்கிறார்கள் அப்பா. ‘ஏண்டி, இந்த எலுமிச்சம் பழத்தை ஒரு ‘காக்காய்’ கொத்திண்டு போகப் போகிறதாமே’ என்று சொல்லாமல் சொல்லி என்னைப் பழிக்கிறார்கள். எனக்கும் இப்போ அவனைப் பிடிக்கவில்லை, அப்பா.”

இதற்குமேல் அவர்கள் இன்னும் என்ன பேசினார்களோ!

ராமு அங்கு நிற்கவில்லை. அவன் எப்படி நிற்பான்! அவன் இதயத்தைப் பிடித்து யாரோ பேய்மாதிரி உலுக்கினார்கள். அவன் தலையிலே ஆயிரமாயிரம் பேரிடிகள் விழுந்தன.

படுக்கையில் வந்து விழுந்தவன் ஒருமுறை கண்ணீர் விட்டு அழுதான். இரவு முழுதும் தூங்கவேயில்லை. எப்படித் தூக்கம் வரும்! வாழ்க்கையில் யாருடைய அன்பின் ஆசாபாசங்களைப் படர விட்டிருந்தானோ அவளே அவனை உதறியபிறகு அவனுக்குத் தூக்கமேது! இல்லை, இந்த வாழ்க்கைதான் எதற்கு!

இதயத்தைக் கல்லாக்கிக் கொண்டு அன்றே ஒரு முடிவுக்கு வந்து விட்டான்.

* * *

மறுநாள் கடத்தூரில் அவனைக் காணவில்லை. நண்பன் ஒருவன் உதவியுடன் பம்பாய்க்கு வந்தான்.

தன்னைக் குறித்து மாமா கவலைப்படக் கூடாது என்று பம்பாயிலிருந்து தன் விலாசம் இல்லாமல் ஒரு கடிதம் அவருக்கு எழுதினான். தாய் தந்தையற்ற அனாதையான தன்னை இவ்வளவு காலம் காப்பாற்றி ஆளாக்கியதற்காக இந்தப் பிறவியிலே அவருக்கு என்றும் தான் கடமைப் பட்டிருப்பதாக அந்தக் கடிதத்தில் கண்ணீர் சொரிய எழுதி யிருந்தான்.

“பிற்காலத்தில் சாருவின் கையை நான் பிடிக்கவேண்டும் என்ற ஒரே ஆசையில் நீங்கள் என்னை ஆதரித்து அன்பு காட்டினீர்கள். இந்த ஆசை உங்களுக்கு இருக்கும்போது இனி எனக்கு என்ன குறை என்ற தைரியத்தில் நானும் அவளை உயிராக நேசித்தேன்.

“ஆண்டவன் தன்னுடைய சிருஷ்டியிலே எனக்களித்த கருமை நிறம், இன்று சாருவின் அன்புக்குத் திரை போட்டு விட்டது. கருமை

அவன் கண்ணை மறைக்கிறது. பளிங்கு போன்ற மாசற்ற என் அன்பு இதயத்தை அவளால் காண முடியவில்லை. நான் போகிறேன்.

"உங்களுக்கும் மாமிக்கும் என்னுடைய கோடி நமஸ்காரங்கள். —அனாதை ராமு."

இந்தக் கடிதத்தைப் படிக்கையில் அவன் மாமா சிறு கண்ணீர் விட்டுக் கதறி அழுதார்.

* * *

காலச் சக்கரம் உருண்டது.

ராமு பம்பாயில் வேலைக்கு அமர்ந்து நான்கு வருட காலம் ஓடி விட்டது.

எவ்வளவோ நாட்களுக்குப் பிறகு சாருவுக்கு மணமாகிவிட்டது என்ற செய்தி பராபரியாக அவன் காதில் விழுந்தது. அவன் விஷயமாக ஏற்கனவே வெந்து புண்ணாகிப் போயிருந்த அவன் இதயத்தை இந்தச் செய்தி அவ்வளவாகப் பாதிக்கவில்லை.

வேக கதியில் இயங்கிக் கொண்டிருந்த பம்பாய் வாழ்க்கையை ஸ்தம்பிக்கச் செய்து விட்டது, அன்று நடந்த பெரும் ஹர்த்தால். காலை பத்து மணிக்குக் காரியாலயங்களுக்குச் சென்ற ஆயிரமாயிரம் மக்கள் பன்னிரண்டு மணிக்கு அவசரம் அவசரமாக வீடு திரும்பிக் கொண்டிருந்தனர். டிராம், பஸ்களின் இரைச்சலின்றித் தெருவெல்லாம் வெறிச்சோடி யிருந்தது. மின்சார ரயில் ஒன்றுதான் போக்குவரத்து மார்க்கமாக இருந்தது.

வீடு திரும்பும் அவசர உணர்ச்சியுடன், கூட்டில் மொய்த்து வழியும் தேனீக்களாக, ஜனக் கூட்டம் ரயிலில் நிறைந்திருந்தது. அந்த நெரிசலில் ராமுவும் நுழைந்து போய் ஏறிக் கொண்டு வந்தான்.

அவன் ஏறிய ரயில் ஐந்து நிமிடம் ஓடி விட்டது. அப்போதுதான் நடுவழியே சில ஹர்த்தால் 'காலிகள்' தண்டவாளத்தின் நடுவில் நின்று கொண்டு, ரயில் போக்குவரத்தையும் நிறுத்த முயன்றனர். வேகமாக ஓடிக் கொண்டிருந்த ரயில் சட்டென்று நின்றது. அப்போது ஏற்பட்ட ஒரு பயங்கர உலுக்கலில் சடசட வென்று பலர் கீழே விழுந்தனர்.

விழாதவர்களில் ஒருவனாக ரயிலில் இன்னும் தொங்கிக் கொண்டிருந்த ராமு, 'ஐயோ! அம்மா!' என்ற வேதனைக் கதறல் ஒன்று தமிழாக வந்தது கேட்டுத் திடுக்கிட்டான். குரல் வந்த திசையைப் பார்த்தான்.

மண்டையிலிருந்து ரத்தம் குபுகுபு வென்று பொங்கி வழிய, தண்டவாளத்தின் ஓரத்தில் ஒருவர் அடிபட்ட வேதனையில் புழுவாக நெளிந்து கொண்டிருந்தார். ராமு சட்டென்று கீழே குதித்து, அந்த நபரை ஒரே அள்ளாக அள்ளித் தோளில் போட்டுக் கொண்டான். அவனுக்கு எங்கிருந்துதான் அவ்வளவு பலம் வந்ததோ, தெரியவில்லை. மள மள வென்று ஓடினான் அருகிலிருந்த ஸ்டேஷனுக்கு.

உடனடியான சிகிச்சைக்காக ரயில்வே ஆஸ்பத்திரிக்கு அவர் கொண்டு செல்லப் பட்டார். அதிகமான ரத்தப் போக்கால் நினைவு தப்பிவிட்ட, முன்பின் கண்டிராத, அவர் உயிரைக் காக்க ஆஸ்பத்திரிக்கு ராமுவும் வேகமாக ஓடினான்.

விநாடிக்கு விநாடி அந்த நபரின் நிலைமை மோசமாகிக் கொண்டு வந்தது. வெளிப்பட்ட ரத்தத்தை ஈடு செய்யப் புதிய ரத்தம்

உள்ளே செலுத்தப்படாவிடில் அவர் பிழைப்பது துர்லபம் என்று டாக்டர்கள் சொல்லி விட்டார்கள். ஆஸ்பத்திரியில் சேகரித்து வைக்கப்பட்டிருந்த ரத்தம் எதுவும் அவருடைய ரத்தத்துக்குச் சேரவில்லை. அவருக்குச் சொந்தமானவர்கள் யாருடைய ரத்தமாவது தான் சேரும் என்று டாக்டர்கள் கூறினர்.

ராமு உடனே அவருடைய ஜேபியிலிருந்த ரயில்வே பாஸில் எழுதப்பட்டிருந்த விலாசத்தைத் தெரிந்து கொண்டு அவர் இல்லத்துக்கு விரைந்து சென்றான்.

அங்கும் ஏமாற்றம் காத்திருப்பது போல அவர் வீடு பூட்டியிருந்தது. பக்கத்தில் குடியிருந்தவர்களிடம் விஷயத்தை விவரித்தான்.

அவர் மனைவியும், இரு குழந்தைகளும் சொந்த ஊர் சென்றிருப்பதாகவும் அவர் மாத்திரம் தான் அங்கு இருப்பதாகவும் சொன்னார்கள். நிலைமை எப்படி விபரீதமாகி விடுமோ என்ற கவலையில் அவர் மனைவிக்குத் தந்தி கொடுக்குமாறு அடுத்த வீட்டுக்காரரிடம் சொல்லிவிட்டு மறுபடியும் ஆஸ்பத்திரிக்கே ராமு விரைந்தான்.

அங்கு நிலைமை இன்னும் அப்படியே நெருக்கடியான தருணத்தில்தான் இருந்தது.

ராமுவுக்கு என்ன தோன்றிற்றோ, தன் ரத்தத்தை அவருக்கு இணைக்க முடியுமா என்று டாக்டர்களைச் சோதிக்கச் சொன்னான்.

ஆச்சரியம்! ராமுவின் ரத்தம் அதி அற்புதமாக அவருடைய ரத்தத்துடன் இணைந்தது!

அவ்வளவுதான். மளமள வென்று அவன் ரத்தம் அவர் உடலில் பாய்ச்சப்பட்டது.

இனி அவர் உயிருக்கு ஆபத்தில்லை என்ற தைரியத்தில் அன்று தன் அறைக்குத் திரும்பினான், ராமு. அன்று இரவு அவன் நிம்மதியாக உறங்கினான்.

மறுநாள் அவரைப் பார்க்க அவன் மனம் துடித்தது. ஆஸ்பத்திரிக்குச் சென்றான்.

அன்றுதான் அவருக்கும் நினைவு பூரணமாய்த் திரும்பி யிருந்தது. மண்டையில் பலத்த கட்டுப் போட்டிருந்தனர்.

தனக்கு உயிரளித்தவன் அவன்தான் என்பதை டாக்டர் மூலம் அறிந்திருந்த அவர் ராமுவை நன்றி உணர்ச்சி பொங்கப் பார்த்தார். அவரால் அதிகமாகப் பேச முடியவில்லை. ஒருவரை யொருவர் பூர்வாங்கமாக அறிந்து கொண்டனர்.

அவர் பெயர் சங்கர். ஏறக்குறைய ராமுவின் வயதை ஒத்தவர். சொந்த ஊர் திருச்சி. பம்பாயில் வருமானவரி இலாகாவில் வேலை பார்த்து வருகிறார்.

'யாருமில்லாத அனாதை பிரம்மச்சாரி ராமு' என்று தன்னை அவருக்கு அவன் அறிமுகப் படுத்திக் கொண்டான்.

மறுநாள். அன்று மத்தியானம்தான் சங்கருடைய மனைவி, மக்கள் ஊரிலிருந்து வருவதாகத் தெரிந்தது.

வழக்கம்போல அன்று காரியாலயத்துக்குப் போய் விட்டான் ராமு. மாலை வீடு திரும்பும் போதுதான், இரண்டு டஜன் ஆப்பிள், ஆரஞ்சுப் பழங்களை வாங்கிக்கொண்டு சங்கரைப் பார்த்துவர ஆஸ்பத்திரிக்குச் சென்றான்.

ஆஸ்பத்திரியில் சங்கர் படுத்திருந்த விசேஷ வார்டினுள் நுழையும்போதே பழக்கமான



மாயூரம் நகரசபை உயர்நிலைப்பள்ளியில அமைந்திருக்கும் ''ராகவ ஐயங்கார் திறந்த வெளி அரங்கு.'' இந்தக் கலாமண்டபத்தில் செப்டம்பர் கடைசி வாரம் ''பாக்ய சக்கரம்'' என்ற தமிழ் நாடகமும், ''தியாகம்'' என்ற ஹிந்தி நாடகமும் நடைபெற்றன. நாடகத்துக்குத் தலைமை வகித்த நீதிபதி திரு ஸையத் இப்ராஹிம் நாடகத்தையும் கலைச் சேவைக்கு ஊக்கமளிக்கும் தலைமை ஆசிரியர் திரு சேஷகிரி அவர்களையும் பாராட்டினர்.

---

தொரு குரல் கேட்டு வியப்பில் அப்படியே நின்று விட்டான் ராமு.

அவன் வாழ்க்கையில் இப்போது இரண்டாம் முறையாக, தன்னைக் குறித்து மற்றவர் பேசுவதை ராமு உற்றுக் கேட்டான்.

ஆம், அதே இனிய குரலல்லவா! அப்படியும் இருக்குமா! ராமுவின் உடல் குப்பென்று வியர்த்தது. வியப்பும் திகைப்பும், பிரமிப்பும் ஏக காலத்தில் அவனை உணர்ச்சி வெள்ளத்தில் ஆழ்த்தி அங்கேயே சிலையாக நிறுத்திவிட்டன. பேச்சைக் கவனித்தான்.

"அவன் மாத்திரம் இல்லாதிருந்தால், இன்று நீ இந்த அழகுக் கோலத்தில் என்னைப் பார்த்திருக்க முடியாது. ரத்த வெள்ளத்தில் ரயிலடியில் கிடந்த என்னை ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போனான். அதோடு அவன் அன்பு நிற்கவில்லை. எனக்கு உயிரூட்ட ரத்தம் வேண்டிக் கிடந்த டாக்டர்களுக்குத் தன் ரத்தத்தையே தானமாக அளித்தான். முன்பின் பார்த்தறியாத எனக்கு அவன் காட்டிய பரிவையும் பாசத்தையும் எதோடு ஒப்பிட முடியும்......!" உணர்ச்சியோடு சங்கர் பேசிக் கொண்டிருந்தார்.

"என் மாங்கல்யத்தைக் காக்க அவர் தெய்வமாகத்தான் வந்திருக்க வேண்டும்."

"ஆமாம், சாரு! அவன் ஒரு தெய்வப் பிறவி. பெயரும் புகழும் வேண்டாதவனாக 'யாருமில்லாத அனாதை பிரம்மச்சாரி ராமு' என்று ஒரே வரியில் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டான்......."

"ஆ! அவர் பெயர் ராமுவா!"

"ஆமாம், ஏன்!"

"எந்த ஊர் என்று சொன்னார்!"

"சொந்த ஊர் கடத்தூர் என்றான்."

"கறுப்பாகவா இருந்தான்!"

"ஆமாம், ரொம்பவும் கறுப்பாகத்தான் இருந்தான்" என்றார் சங்கர்.

"ஐயோ! ராமு, நீயா!" என்று சாரு அலறினாள்.

ராமு அடுத்த விநாடி அங்கு நிற்கவில்லை. ஆஸ்பத்திரியிலிருந்து வெளியே விறுவிறு என்று நடந்தான்.

பாதி சம்பாஷணையைக் கேட்டு நகர்வது அவனுடைய வாழ்க்கையில் இது இரண்டாவது முறை. முதல் முறை ஏற்பட்ட உணர்ச்சிக்கும் இப்போதைய உணர்ச்சிக்கும்தான் எவ்வளவு வித்தியாசம்! அப்போது இதயம் வெந்து போனான். இப்போது ஆசை தீர்ந்து, தாபம் தணிந்த இதயத்தோடு போகிறான்.

* * *

மறுநாள் ஆஸ்பத்திரிக்குப் புறப்படச் சித்தமாகிக் கொண்டிருந்தாள் சாரதா. அப்போது யாரோ ஒரு புதிய ஆள் ஒரு கூடைநிறைய ஆப்பிள் ஆரஞ்சுப் பழங்களுடன் அவள் வீட்டில் நுழைந்தான். கூடவே ஒரு கடிதத்தையும் அவளிடம் கொடுத்து "இதையெல்லாம் ராமு ஐயா உங்களிடம் கொடுத்து வரச்சொன்னார்" என்று 'சொல்லி விட்டு' விரு விருவென்று வெளியே வந்து விட்டான்.

ஒரு கணம் பிரமித்துப்போன சாரு, நடுங்கும் கைகளுடன் கடிதத்தைப் படிக்கத்துவங்கினாள்.

பம்பாய்

சகோதரி சாரு, 19—7—55

மாசற்ற உள்ளத்தோடு இளமையின் துடிப்பு நிறைந்த பருவத்தில், உன்னுடைய வாழ்க்கையில் குறுக்கிட்டு இப்போது ஏகாங்கியாக இருக்கும் இந்தத் துர்ப்பாக்கியவான் ராமுவை நினைவிருக்கிறதா? அநாதையாகிய எனக்கு ஆதரவு தந்து ஆளாக்கினார் உன் தந்தை.

சற்றும் எதிர்பாராத விதத்தில் விதி அன்று என்னைச் சங்கருடன் கூட்டி வைத்தது. முன்பின் கண்டிராத ஒரு மூன்றாம் மனிதர் என்று நான் அவரைக் குறித்து எண்ணியிருந்தேன்.

நேற்று மாலை ஆஸ்பத்திரிக்கு நான் வந்தபோது நீயும் அவரும் பேசுவதைக் கேட்க நேர்ந்தது. சங்கருடைய மனைவியாக உன்னைப் பார்த்தபோது நான் அடைந்த வியப்புக்கு அளவேயில்லை. என்னுடைய அற்ப உதவி, தியாகம் உன்னுடையவருக்குப் போய்ச் சேர்ந்தது என் மனப் பாரத்தைக் குறைத்து, தாபத்தைப் போக்கிற்று. அந்த மகிழ்ச்சியில் அப்படியே வந்த வழி திரும்பி விட்டேன்.

சாரு! என்னுடைய கருமையில் உன்னுடைய அன்பு மறைந்தது போல என்னை மறந்துவிடு. நானும் நம்முடைய குழந்தைப் பருவத்து போன நாட்களை மறந்து விட்டேன். வேறொருவருக்கு உரியவளாகி விட்ட நீ என் உத்தம சகோதரி. சங்கரிடம் என் அன்பைச் சொல்.

உனது கண்மணிகளான குழந்தைகளை நான் பார்க்கவில்லை. அவர்களுக்கு என் ஆசிகள்.

கடைசியாக உன்னிடம் ஒன்று யாசிக்கிறேன், சாரு.

பேதமில்லா அன்பு உள்ளம் படைத்த இந்த அனாதை ராமுவை நீ இனி மறந்து விடு.

ஏகாங்கி ராமு

கடிதத்தைப் படித்து முடித்த சாருவின் நயனங்களிலிருந்து இரு சொட்டுக் கண்ணீர்த் துளிகள் உருண்டன.



# மண்ணாசை

நித்யன்



"அப்பா, ஒரு கேள்விக்கு விடை தெரியவில்லை. கொஞ்சம் சொல்லித்தா..." என்று சிணுங்கினான் அவன்.

தினசரிப் பத்திரிகையை வைத்து விட்டுத் திண்ணையிலிருந்த சாய்வு நாற்காலியில் சாய்ந்தேன். எதிர் வீட்டுத் திண்ணையில் சாம்புத்தாத்தா புன்முறுவலுடன் என்னை நோக்கிக் கொண்டிருந்தார்.

"என்னடா தெரிய வில்லை?" என்றேன் சேகரிடம்.

"அப்பா, அசோகர் புத்த மதத்தை மேற்கொள்ளக் காரணம் என்ன? இந்தக் கேள்விக்குத்தான் விடை தெரிய வில்லை" என்றான் சேகர்.

"அசோகன் கலிங்கத்துப் போரில் ஏற்பட்ட உயிர்ச் சேதங்களைக் கண்டு மனம் கலங்கி அஹிம்சை மார்க்கமான புத்த மதத்தைப் பின் பற்றினான். இதுதான் விடை" என்று சொல்லி விட்டுப் பெருமிதத்துடன் சாம்புத் தாத்தாவை நோக்கினேன்.

அவர் இலேசாகச் சிரித்துக் கொண்டே, "எல்லோரும் அப்படித்தான் நினைத்துக் கொண்டிருக்கின்றனர். ஆனால், அசோகனின் மனமாற்றத்துக்குக் காரணம் கலிங்கத்துப் போரினால் ஏற்பட்ட மன வருத்தம் மட்டு மன்று. அதன் பின்னே ஒரு முக்கிய நிகழ்ச்சியும் ஒளிந்து கொண்டிருக்கிறது. அது தான் அவன் மனமாற்றத்தின் முக்கிய காரணம்" என்று கூறி விட்டுக் கதையைத் தொடர்ந்தார்.

மாலைச் சூரியனின் ஒளி சிறிது சிறிதாக மங்கிக் கொண்டே வந்தது. இருள் தன் ஆக்ரமிப்பை இலேசாகத் தொடங்கியது.

கலிங்கத்து மக்களின் பயம் பலித்தே விட்டது. ஓடிய வீரர்கள் அனைவரும் அசோகனின் நாடு பிடிக்கும் அசுர வெறிக்கு ஈடு கொடுக்க முடியாமல் வீழ்ந்து விட்டனர், மார்பிலே தாங்கிய வேல்களுடன் யுத்த களத்தில்!

பத்து தினங்களாக ஓரே இரைச்சலாக இருந்த அந்த யுத்தகளம் அன்றுதான், கலிங்க மன்னன் முறியடிக்கப் பட்ட பின், தன் மீது ஓடிய ரத்த வெள்ளத்தைத் தாங்கிக் கொண்டு நிசப்தமாக இருந்தது.

அசோகன் அந்தப் போர்க்களத்தில் அமைதியாக நடந்து கொண்டிருந்தான், களிப்புத் துள்ளும் உள்ளத்தோடு. ஆம்! அவன் அன்று முதல் அந்த விசாலமான பொன் கொழிக்கும் பூமிக்கு அரசன் அல்லவா?

அவன் வீரர்களில் சிலர் இந் நேரம் நகரில் நுழைந்து அவனது நாளைய நகரப் பிரவேசத்துக்கான ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருப்பர். மக்களிடம் ஏற்பட்டுள்ள பீதியை ஆங்காங்கே கூட்டம் போட்டு எடுத்துச் சொல்லிப் போக்கிக் கொண்டிருப்பர். இவ்வளவு நேரம் நகரெல்லாம் தோரணங்கள், மாவிலைகளால் அலங்கரிக்கப் பட்டிருக்கும். நாளைய மங்கள விழாவை நடத்தப் புரோகிதர்கள் கூடி யிருப்பர்.

மேற் கண்டவாறு எண்ணமிட்டுக் கொண்டு நடந்து கொண்டிருந்த மன்னனின்கால்களில் ஏதோ தடுக்கியது. திடுக்கிட்டுக் கீழே குனிந்து பார்த்தான்.

வீரனின் சடலம்! அதைப் பார்த்துக் கொண்டிருந்த அசோகன், அந்தச் சவத்தின் முகத்தைக் கவனித்து விட்டுத் தீயை மிதித்தவன் போல் திடுக்கிட்டான்.

"ஐயோ, என்ன காரியம் செய்தேன்?" என்று அலறிக் கொண்டே அந்தச் சவத்தின் மீது தடாலென்று வேரறுந்த மரம் போல் விழுந்தான்!

நிமிஷங்கள் கரைந்து கொண்டிருந்தன. சிறிது நேரம் சென்றது. மெதுவாக அந்தச் சடலத்தின் மீதிருந்து தலையைத் தூக்கினான் அசோகன். அவனது அகன்ற விழிகள் இரண்டும் கீழே உறைந்து கிடந்த இரத்தத்தைப் போல் சிவந்திருந்தன.

முழங்கால்களை மெதுவாகப் பூமியில் ஊன்றிக் கொண்டு எழுந்து மண்டியிட்டான் அசோகன். இரண்டு கைகளையும் அந்தச் சடலத்தின் அடியில் கொடுத்து வாரித் தூக்கி மார்போடு அணைத்துக் கொண்டான். அவன் கண்களிலிருந்து 'பொல பொல' வென்று உதிர்ந்த கண்ணீர் தரையை நனைத்தது.

* * *

கலிங்கத்தின் வடக்கெல்லையாக ஓடும் மகாநதியின் எதிர்க்கரையில் அசோகனின் படைகள் வந்து இறங்கி விட்டன. அது வரை அமைதியாக இருந்த அந்த இடம் அப்போது இரைச்சலில் மூழ்கிக் கிடந்தது.

மாலை வேளை. சுகமான இளந் தென்றல் வீசிக் கொண்டிருந்தது. தூரத்தே தண்ணீரைக் கிழித்துக் கொண்டு ஒரு படகு வந்து கொண்டிருந்தது.

அசோகன் தனியாகப் படகுத் துடுப்பை வலித்தான். படகு வேகமாகச் சென்று கொண்டிருந்தது.

வேகமாகச் சென்று கொண்டிருந்த படகு திடீரென்று ஒரு சுழலில் சுழன்றது. ஏதோ யோசனையில் ஆழ்ந்திருந்த அசோக மன்னன் திடுக்கிட்டு எழுந்தான். அதற்குள் படகு வேகமாக இரண்டு மூன்று தடவை சுழன்று தண்ணீரில் மூழ்கியது. 'தொப்' பென்று வேகமாகச் சுழித்தோடும் நீரில் குதித்தான் அசோகன். ஆனால்...... வேகமாகத் தண்ணீரினால் அடித்துக் கொண்டு வரப்பட்ட அவன் மற்றொரு சுழலில் சிக்கிக் கொண்டான்!

சுழல் அவனைச் சுற்றிச் சுற்றி அடித்தது. அவனுக்குத் தலை 'கிறு கிறு' என்று சுழன்றது. இரண்டு வாய்த் தண்ணீர்



கூடக் குடித்து விட்டான். கழுத்து இலே சாகத் தண்ணீரில் மூழ்கியது. அவனுக்கு மூச்சுத் திணறியது. கண்கள் இருண்டு கொண்டே வந்தன. அடேடே! அதோ கரையில் யார்? ஏதோ சிரிப்பொலி கேட்கிறதே! ஒரு வாலிபனும் ஒரு இள மங்கையும் வந்து கொண்டிருக்கின்றனரே!

அசோகனின் கண்களுக்கு மங்கலாக அக் காட்சி ஏதோ கனவில் நடப்பதுபோல் தோன்றியது. அவனுக்கு ஒரு கடைசி ஆசை! வலுவிழந்த கையை மேலே தூக்கி ஆட்டினான். அவன் நினைத்தபடியே அந்தப் பெண் அதைக் கவனித்து விட்டாள்.

அவன் இருந்த இடத்தைச் சுட்டிக் காட்டி அவள் அந்த இளைஞனிடம் ஏதோ கூறுவதைக் கவனித்தான் அசோகன்.

தண்ணீர் மட்டம் ஏறியது. தொப் பென்று யாரோ தண்ணீரில் குதிக்கும் சத்தம்! அதைத் தொடர்ந்து அசோகனின் தலை தண்ணீரில் மூழ்கியது. பிறகு—ஒரே இருள்! இருள்! இருள்! அவன் நினைவு இழந்தான்!

அவன் கண் விழித்தபோது ஒரு ஜோடிக் கண்கள் அவனை ஆவலுடன் பார்த்துக் கொண்டிருந்தன!

அங்கே—அந்த வாலிபன்—அசோகன் தண்ணீரில் மூழ்குவதற்கு முன் அவன் கண்களுக்கு அரைகுறையாகத் தெரிந்த அந்த வாலிபன்—புன்முறுவலுடன் நின்று கொண்டிருந்தான்!

"மாயா, போய்க் கொஞ்சம் வெந்நீர் கொண்டு வா."—அந்த இளைஞன் கண்கள் சென்ற பக்கம் அசோகனின் விழிகள் தாமாகத் தாவின!

"இதோ கொண்டு வருகிறேன்" என்று சொல்லிக் கொண்டே குடிசையின் ஒரு மூலைக்குச் சென்றாள். அடுப்பில் தயாராக இருந்த வெந்நீரை எடுத்துக் கொண்டு திரும்பி வந்தாள். அசோகனின் விழிகள் மேலே உயர்ந்தன. நன்றியுடன் மாயாவை நோக்கினான்.

"இந்தாருங்கள், வெந்நீரைக் கொஞ்சம் குடியுங்கள், சுறுசுறுப்பாகத் தெம்பு வரும்" என்றான் அந்த வாலிபன். அசோகன் மெதுவாக எழுந்தான். நடுங்கும் கரங்களுடன் அவனிடமிருந்து குவளையை வாங்கிக் கொண்டான்.

சிறிது நேரம் சென்றது. அசோகனுக்குச் சிறிது சிறிதாக நடந்தவை யெல்லாம் சீராக நினைவுக்கு வந்தன.

"நீங்கள் யார்? எப்படிச் சுழலில் சிக்கினீர்கள்? மகா நதியிலேயே அது மிகப் பெரிய சுழலாயிற்றே!" என்றான்.

அசோகன் சிறிது நேரம் மௌனமாக இருந்தான். பிறகு, "நான் ஒரு சாதாரண சிப்பாய். அசோகரின் படைகள் இங்கிருந்து சிறிது தூரத்தில் கூடாரம் அடித்துக் கொண்டு தங்கியிருக்கின்றன. அதில் பணிபுரிபவன் நான். இயற்கைக் காட்சிகளை ரசிப்பதற்காகப் படகில் ஏறி வந்தவன் அஜாக்கிரதையினால் சுழலில் சிக்கிக் கொண்டேன். நல்ல வேளை! தக்க சமயத்தில் நீங்கள் வந்து காப்பாற்றினீர்கள்! இந்த உதவியை நான் என்றும் மறக்க மாட்டேன். நேரம் ஆகிவிட்டது. நான் உடனே போக வேண்டும்" என்றான்.

"சரி, மாயா! நீ சற்று நேரம் இரு. நான் இவரைக் காட்டின் எல்லையைத் தாண்டிக் கொண்டு விட்டு வருகிறேன்" என்றான் வாலிபன், மங்கையைப் பார்த்து. அவள் தலையை அசைத்தாள்.

இருவரும் குடிசையின் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தனர். போகும் வழியில் அசோகன் அந்த இளைஞனிடம் பேச்சுக் கொடுத்துத் தெரிந்து கொண்டது இதுதான்:

அவன் பெயர் காந்தவேலனாம். அந்த மங்கை அவனுடைய அத்தை மகளாம். அவர்கள் இருவருக்கும் சீக்கிரமே மணம் நடக்க ஏற்பாடாகியிருக்கிறதாம். அவனுடைய இருப்பிடம் எதிர்க் கரையிலுள்ள கலிங்கர்தானாம். அந்தக் குடிசையில் மாயாவும் அவள் தாயும் வசித்து வருகிறார்கள். தற்போது அவள் தாய் க்ஷேத்திராடனம் செய்யப் போயிருக்கிறாளாம். அவன் சில நாட்கள் உல்லாசமாக இக் கரைக்கு வந்து அவர்களுடன் இருப்பானாம்.......

காட்டைத் தாண்டியவுடன் அசோகன் காந்தவேலனைக் கட்டித் தழுவிக் கொண்டு தன் இருப்பிடத்துக்கு வந்து சேர்ந்தான்.

அந்தக் காந்தவேலனா இது? அசோகன் மறுபடியும் அந்தச் சடலத்தின் முகத்தை உற்று நோக்கினான். ஆம்! அவன் உயிரை அன்று மகாநதியின் சுழலிலிருந்து காப்பாற்றிய காந்தவேலன்தான்! அந்த புன்சிரிப்பு இறப்பின் இறுகிய பிடியிலும் தவழ்ந்து கொண்டுதானிருந்தது.

அசோகனின் மனக் கண்முன் மாயா தோன்றினாள். ஐயோ! அன்று அவள் இருந்த அழகு என்ன? இப்போது அவள் இருக்கும் நிலை என்ன? ஏன் இப்படி வாடிவிட்டது......?

அசோகன் மெதுவாக எழுந்தான். துவண்டு கிடந்த காந்தவேலனைத் தோளில் சுமந்து கொண்டு மகாநதியை நோக்கி அந்த இரவில் தனியாக நடந்தான்.

சிறிது நேரத்தில் மகா நதியில் ஒரு படகு அசோகனையும் காந்தவேலனின் சடலத்தையும் சுமந்து கொண்டு எதிர்க் கரையிலுள்ள மாயாவின் குடிசையை நோக்கி மெள்ள நகர்ந்தது.

தோளிலே காந்தவேலனைச் சுமந்து கொண்டு குடிசையின் வெளிக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தான்

# சூப்பர் இந்தியா

## டயர்களையே கேட்டு வாங்குங்கள்

உறுதி, நம்பிக்கை மற்றும் நீடித்த மைல்கள் ஓடி உழைப்பதற்கு சூப்பர் இந்தியா ஜ்யாண்ட் டயர்களுக்கு* (லாரி, பஸ் டயர்கள்) ஈடு இணையில்லை. அனுபவசாலிகளான ரஸ்தா போக்குவரத்து வாகன முதலாளிகள் பெரும்பான்மையோர் தங்கள் லாரிகளுக்கும் பஸ்களுக்கும் இப்பிரசித்தி பெற்ற டயர்களையே வெகுகாலமாக உபயோகித்து வருகின்றனர்.



* இந்த டயர்களுக்கு இப்பொழுது ரேயான் லைனிங் உள்ளதனால், ஓடும்போது டயர்கள் அதிகமாக சூடாகாது . . . அதிக மைலேஜும் கிடைக்கிறது.

**"சிவப்பு வட்டமுள்ள டயர்கள்"**

IT. 9492 (s)

அசோகன். குடிசையின் உட்கதவு உட்புறமாகத் தாழிட்டிருந்தது.

அசோகன் மனத்துக்கு அந்த நிசப்தம் ஏதோ சொல்ல முடியாத பயங்கர வேதனையை யளித்தது.

"அம்மா, அம்மா!" என்று பலதடவைகள் கூப்பிட்டு விட்டான் அசோகன். குடிசையின் உள்ளே யிருந்து குரலே வரவில்லை.

கடைசியில் இருக்கும் பலத்தை எல்லாம் ஒன்று கூட்டிக் காலால் ஒரு உதை விட்டான் கதவை. அது தெறித்து விழுந்தது. அவசர அவசரமாகக் குடிசையினுள் நுழைந்தான். உள்ளே ஒரு மூலையில் ஒரு அகல் விளக்கு மெல்லிய மங்கலான ஒளி தந்து கொண்டிருந்தது. அந்த மெல்லிய ஒளியில் குடிசையினுள் இருக்கும் பொருள்களைக் கவனிக்க முடியவில்லை அசோகனால்.

காந்தவேலனைத் தரையில் கிடத்தி விட்டு அகல் விளக்கின் அருகில் சென்று சுடரைத் தூண்டி விட்டான். குப்பென்று பிரகாசமான ஒளி பரவியது குடிசையினுள்.

அசோகன் பதற்றத்துடன் திரும்பினான். அங்கே ஒரு மூலையில்—ஐயோ!

தரையில் மாயா விழுந்து கிடந்தாள். அவள் கழுத்து தொங்கிப் போயிருந்தது. கண்கள் மேலே செருகி யிருந்தன!

ஆம்!

"மாலைப் பொழுது மங்குவதற்குள் எப்படியும் வந்து விடுகிறேன். அப்படி நான் வராவிட்டால் போர்க்களத்தில் நான் வீர மரணம் அடைந்து விட்டதாக எண்ணிக் கொள்" என்று அவளிடம் சொல்லி விட்டு விடைபெற்று அசோகனின் சேனையை முறியடிக்கப் போர்க்களம்புகுந்தான் அவள் காதலன். இரவு உலகைச் சூழ்ந்தும் காந்தவேலன் திரும்பி வராததனால் யுத்தத்தில் அவன் இறந்து விட்டதாகத் தீர்மானித்துத் தன் உயிரை மாய்த்துக் கொண்டு விட்டாள் மாயா!

"ஐயோ!" என்று அலறிக் கொண்டே மாயாவின் அருகில் ஓடினான் அசோகன். குனிந்து அவள் முகத்தை நோக்கினான். அவள் கண்களிலிருந்து வழிந்தோடியிருந்த கண்ணீர் கன்னங்களில் கறை கட்டியிருந்தது!

அசோகனிடமிருந்து இப்போது விம்மல்கள் வரவில்லை. ஏன்? அவன் கண்கள் கூடச் சிறிதும் கலங்கவில்லை!

திக்பிரமை பிடித்தவன் போல் மாயாவையே உற்று நோக்கிக் கொண்டிருந்தான்!

அசோகன் மௌனமாகக் கீழே குனிந்தான். மாயாவின் பாதங்களைத் தன் கைகளால் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டான். நிமிர்ந்து பார்த்தான்—அவன் கண் பார்வை மோதிய இடத்தில் குடிசையின் சுவர் தெரிந்தது. அதில் ஒரு சிறு மாடம். அம் மாடத்தில் ஒரு சிறிய பொம்மை! ஏகாந்தமான போதி மரத்தடியில், முகத்தில் சாந்தம் தவழ, கண்கள் அறிவொளி வீசக் காஷாய உடையுடன் தியானத்தில் அமர்ந்திருக்கும் புத்தபிரானின் பொம்மை. அது வெள்ளை வெளேரென்று தந்தத்தில் செதுக்கப்பட்டிருந்தது!

அசோகன் மனத்தில் விவரிக்க முடியாத உணர்ச்சி ஒன்று நிரம்பி வழிந்து கொண்டிருந்தது. கண் இமைக்காமல் மங்கிய சுடரொளியிலும் 'பளிச்' சென்று ஒளி வீசும் அச் சிறு பொம்மையையே பார்த்துக் கொண்டிருந்தான், வெகு நேரம்.

பிறகு, மெள்ளச் சுவரின் அருகில் சென்று நடுங்கும் கரங்களுடன் மாடத்திலிருந்து அதை எடுத்தான். கண்ணீர் மல்கும் கண்களில் அதை ஒற்றிக் கொண்டான். அப்போதுதான் அவனது கண்கள் அப்பொம்மையின் அடியில் ஏதோ எழுத்துக்கள் பொறிக்கப்பட்டிருப்பதைக் கண்டன!

மங்கிய ஒளியில் அதைப் படித்தான்.

"ஆசையை ஒழி; ஆசையே அழிவுக்குக் காரணம்" என்று அவனுடைய வாய் முணு முணுத்தது.

அசோகனின் வாய் அந்த வாக்கியத்தையே திரும்பத் திரும்ப உச்சரித்துக் கொண்டிருந்தது. அடுத்த கணம் அவன் மனத்தின் அடித் தளத்தில் ஒரு புது சங்கற்பம் உதயமாகியது.

திடீரென்று உடைவாளை உறையுடன் எடுத்தான். பலங்கொண்ட மட்டும் தூர வீசினான் அதை. 'டங்'கென்று எதிரில் இருந்த சுவரில் மோதிக் கீழே விழுந்தது அது.

அப் புத்தர் பொம்மையைப் பத்திரமாகத் தன் உடையில் வைத்துச் கொண்டான். பிறகு காந்தவேலன் அருகில் வந்து கீழே குனிந்து மண்டியிட்டு அந்தச் சுத்த வீரனின் பாதங்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டான்.

வெள்ளி முளைக்கும் சமயம். நிம்மதியான சலனமற்ற மனத்துடன் குடிசையினின்று வெளியே வந்தான் அசோகன். அதுவரையில் அவன் நெஞ்சுக் கடலில் அலையெழுப்பிக் கொண்டிருந்த மண்ணாசை இப்போது மறைந்து விட்டிருந்தது.

கதையை நிறுத்தினார் சாம்புத் தாத்தா. கைக் கடிகாரத்தைப் பார்த்தேன். மணி ஒன்பது. ஆபீசுக்கு நேரமாகி விட்ட அவசரத்தில், "இந்தக் கதை உங்களுக்கு எப்படித் தெரியும்? யார் சொன்னார்கள்? இதற்குச் சான்றுகள் இருக்கின்றனவா?" என்று கூடச் சாம்புத் தாத்தாவைக் கேட்காமல், "சரி, வருகிறேன்" என்று அவரிடம் விடைபெற்றுக் கொண்டேன்.


ஆனந்தம்-அவர்கள்
ஆரோக்கியமே காரணம்!

# வாக்குறுதி

கே. ஆர். கௌசல்யா

திறந்திருந்த ஜன்னல் வழியாகச் 'ஜில்' லென்று வந்து வீசிய குளிர்ந்த காற்றினால் மகாதேவனின் கையிலிருந்த கடிதம் படபடத்துக் கொண்டிருந்தது. கடிதத்தை மறுநாள் காலை தபாலில் சேர்த்துவிட வேண்டியதுதான். அது அவரது உறவினர் சீதாராமனின் கையில் கிடைத்ததும் அவர் மகிழ்ச்சியினால் பூரிப்பார். பிறகு! விரைவிலேயே ஒரு சுப முகூர்த்தத்தில் அவரது பெண்ணின் தளிர்க் கரம் பற்றும் பேறு மகாதேவனுக்குக் கிடைக்கும்.

கையிலிருந்த கடிதத்தின்மீது 'தொப்'பென ஏதோ ஒன்று வந்து விழுந்தது. வாடிய மலர் மாலையிலிருந்து உதிர்ந்திருந்த ஒரு வாடிய புஷ்பம்! தலை நிமிர்ந்தபோது சுவரில் மாட்டியிருந்த புன்சிரிப்புத் தவழும் அவரது முதல் மனைவி விஜயாவின் படம் தென்பட்டது. அடுத்த கணம் ஏதேதோ நினைவுகள் பொங்கி எழுந்தன. 'சாகும்போது என்னிடம் என்ன உறுதிமொழி கொடுத்தீர்கள்!' என்று விஜயா அவரைக் கேட்டாள்.

'விஜயா! நீ ஓர் தெய்வப் பிறவி! கணவனின் உள்ளம் கடுகளவும் கோணச் சகியாத, பொன் உள்ளம் படைத்த ஓர் லட்சிய மனைவி' என்றெல்லாம் நினைத்திருந்தேன். ஆனால் உன்மீது தோன்றிய அந்த உயர்வான அபிப்பிராயம் தவறு என்பதை இப்போதுதான் உணருகிறேன். ஏன்! உன்னைப் பிரிந்து விடப்போகும் மட்டற்ற துயரத்தில் நான், என் நிகழ்காலம், எதிர்காலம், வாழப்போகும் உலகம் எல்லாவற்றையும் மறந்து இருண்ட உள்ளத்துடன் இருந்த ஒரு மன நிலையில், 'மறுமணம் என்பதை மனசாலும் நினைக்க மாட்டேன்!' என்று உன்னிடம் சொன்னேன். ஆனால் நீ என்னிடம் உண்மையான அன்பும் காதலும் வைத்தவளாக இருப்பின் அதற்கு என்ன மறுமொழி சொல்லியிருக்க வேண்டும்! 'இப்படியெல்லாம் வைராக்கியம் வைத்துக் கொள்ளாதீர்கள்! என்னை நினைத்து உலக இன்பங்களை மறந்து வாழ்க்கை முழுவதும் ஓர் நடைப் பிணம் போல் உலவுவது என்பது மிகக் கடினம். நீங்கள் அவசியம் மறுமணம் செய்து கொள்ள வேண்டும். அதுவே என் விருப்பம்; வேண்டுகோள்!' — என்றல்லவா பதிலிறுத்திருக்க வேண்டும்! ஆனால் நீ அப்படிச் சொல்லவில்லை! மௌனமாக இருந்தாய்.

இப்போது நான் மறு விவாகம் செய்து கொள்ள ஏற்பாடுகள் செய்வதில் முனைந்திருக்கிறேன். ஆனால் குடம் பாலில் துளி விஷம் போல உன் அதிருப்தி—சாகும்போது நீ என்னை மறு மணம் செய்து கொள்ளச் சொல்லி வற்புறுத்தாத ஒரு விஷயம் என் நினைவில் வந்து வந்து, என் நெஞ்சின் நிம்மதியைக் குலைக்கிறது. 'உன் மன விருப்பத்தை மீறி நான் தொடங்க விருக்கும் என் எதிர்காலம் ஒரு வேளை பொலிவு பெற்றுத் திகழாதோ!' என்று நான் அல்லும் பகலும் தவித்து உருகுவதை நீ அறிவாயா!'—மகாதேவன் சிந்தனை வெள்ளத்தில் சிக்கித் தவித்துக் கொண்டிருந்தார்.

மகாதேவனுக்கு இப்போது வயது நாற்பதை எட்டிப் பிடித்துக் கொண்டிருந்தது. இளம் வயதில் அவரிடம் பணம் காசுக்கோ, மற்ற எந்த விதத்திலோ குறை என்பது இருந்தது கிடையாது. அழகே வடிவான, தந்தப் பதுமை போன்ற விஜயாவின் கரம் பற்றிய போது அந்த மகிழ்ச்சிக்கும், திருப்திக்கும் எல்லையில்லாமல் இருந்தது. ஆனால் எந்த இன்பமுமே அதிக காலம் நீடித்திருப்பதில்லை என்பது உலக நியதியாகிவிட்டது அல்லவா! ஆரோக்கியமே உருவாக இருந்த மகாதேவனின் இளம் மனைவிக்கு எங்கிருந்தோ க்ஷய ரோகம் பற்றிக் கொண்டது. வியாதி அவள்

உடலையும், உள்ளத்தையும் கொஞ்சம் கொஞ்சமாய் அரித்து வருவதைக் கண்ணுற்றபோது மகாதேவனுக்கு உலகத்தின்மீதே அளவற்ற வெறுப்பு வேர் விட்டது.

அன்றைய தினம்தான் மகாதேவனின் வாழ்க்கைப் போக்கையே அடியோடு மாற்றி விட்ட துயர தினம். அன்று விஜயாவின் உடல் நிலை மிகவும் மோசமாக இருந்தது.

விஜயா கண்களை மெல்லத் திறந்தாள். "நான் பாவி! உங்களுடன் வாழக் கொடுத்து வைக்கவில்லை! நீங்கள்தான் எப்படிப்பட்ட அன்பு மனம் படைத்தவர்!...இத்தனை நாட்களாக என்னால் உங்கள் மனசுக்கும் நிம்மதியில்லை, உடலுக்கும் ஓய்வு இல்லை. நான் கண்ணை மூடினால் உங்கள் தொல்லை தீரும். என்னை மறந்து புது வாழ்க்கை தொடங்கலாம்!" என்று ஈனஸ்வரத்தில் சொல்லிக் கண்ணீர் வடித்தாள்.

மகாதேவனின் மனம் பாகாய் உருகியது. "உன்னை மறப்பதா! விஜயா! அது கனவில் கூட இல்லை. உனக்குப்பின் என் உள்ளம் இருண்ட பாலைவனம் தான். அந்தத் தவிப்பிலே வேறோர் விவாகம் என்னும் பசுஞ்சோலை உண்டாகவே முடியாது!...என்ன பேசாமலிருக்கிறாயே!" என்று தழுதழுத்த குரலில் கேட்டார் அவர்.

விஜயா மௌனமாகச் சோகப் புன்னகை புரிந்தாள். "என் நினைவுச் சின்னமாகக் குழந்தைகள் ஒன்றையும் விட்டுச் செல்லவில்லை நான்! உயிரற்ற ஜடப் பொருள்களான, என் உடைகள், நகைகள், என் நெஞ்சின் அலைகளைக் கொட்டித் தீர்த்திருக்கும் என் நாட்குறிப்புப் புத்தகம், நான் கையாண்ட பாத்திரம் பண்டங்கள் எல்லாவற்றையும் விட்டுச் செல்கிறேன்! அவற்றைப் பார்க்கும் போதெல்லாமாவது என் நினைவு வருமல்லவா உங்களுக்கு!" என்று வறண்ட குரலில் கேட்டாள்.

"உன்னை மறந்தால்தானே 'நினைவு' என்ற கேள்வி எழும்!....அது என்றுமில்லை!"...அவள் மெலிந்த கரத்தை எடுத்து நெஞ்சில் வைத்து அழுத்திக் கொண்டார். அடுத்த கணம் அவர் பற்றியிருந்த அவள் கரம் துவண்டு விழுந்தது. அவள் உயிர் பிரிந்து விட்டது.

விஜயாவின் மறைவுக்குப் பின் அன்ன ஆகாரத்தில்கூட இச்சையின்றிப் பிரமை பிடித்தவராக வளைய வந்தார் மகாதேவன்.

நெருப்பு சுட்டு விடும்போது பொறுக்க முடியாத வலியாகத்தான் இருக்கிறது. நாளாவட்டத்தில் சுட்ட புண் ஆறிவிடுவதில்லையா! இந்த உலக நியதிக்கு மகாதேவன் மட்டும் விதிவிலக்கல்லவே! காலம் அவர் மனப் புண்ணை மெல்ல ஆற்றிக் கொண்டு வந்தபோது தான் அவர் மன உறுதிக்குச் சோதனையாக அந்தக் கடிதம் வந்து சேர்ந்தது. மகாதேவனின் தூரத்து உறவினர் ஒருவர் தம் பெண்ணை வயசும் பாராமல் அவருக்கு இரண்டாம்தாரமாக மணமுடித்து வைக்க விரும்புவதாகக் கூறி அவர் சம்மதம் கேட்டு எழுதியிருந்தார்.

அந்தக் கடிதத்தைக் கண்டபோது, முதலில் மகாதேவனின் மனம் திடுக்கிட்டது. 'விஜயாவை மறந்து வேறு விவாகமா!'—என்று அவர் எண்ணினார்.

'சபதம், சலனம், சபலம், இவற்றுக்கிடையே பலமான போராட்டம் நடந்து உள்ளம் ஒரு சமாதானத்துக்கு வந்த போது, இறுதியில் சபலமே வெற்றி பெற்று, அந்த உறவினருக்குச் 'சம்மதம்' எனப் பதிலெழுத வைத்தது. கடிதம் எழுதி முடித்தபோது விஜயாவைப் பற்றிய நினைவுகள் குமிழியிட்டன.

• • •

கண்ணெதிரே இருந்த கடிதம் இப்போதும் காற்றிலே படபடத்துக் கொண்டிருந்தது. ஜன்னல் வழியே வந்த சாதாரணக் காற்று பெருங் காற்றாக மாறி மேலாகச் சாத்தியிருந்த பீரோவின் கதவு 'படா'ரென்று திறந்து மூடிக் கொண்ட ஓசை கேட்டு மகாதேவனின் சிந்தனை கலைந்தது. பறந்து போகா வண்ணம் கனமான வஸ்து ஒன்றைக் கடிதத்தின் மேல் வைத்துவிட்டுக் கவர் எடுப்பதற்காக பீரோ டிராயரைத் திறந்தார்.

உணர்ச்சியற்ற யந்திரம் போல் டிராயரிலிருந்த விஜயா உபயோகித்த ஒவ்வொரு வஸ்துவையும் எடுத்துப் பார்த்துப் பார்த்து வைத்தார். அவற்றுக்கு அடியிலே தென்பட்ட அந்த நாட் குறிப்புப் புத்தகத்தை எடுத்தார்; முத்து முத்தான கையெழுத்திலே அதில் காணப்பட்ட வரிகள் அவரைக் கண்கலங்க அடித்தன.

கடைசியாக எழுதி நிறுத்தியிருந்த பக்கத்தில் அவர் பார்வை லயித்தபோது மகாதேவன் கல்லாய்ச் சமைந்து விட்டார்.

விஜயா 'சானிடோரிய'த்துக்குச் செல்லுவதற்கு முதல் நாள் எழுதியிருந்தாள்.

'இந்த நாட் குறிப்புப் புத்தகத்தில் என் பேனா ஓடப்போவது இன்றுதான் கடைசி நாள் போலும்! மீண்டும் சிகிச்சைக்குப் பின் திரும்பி இதைத் தொடர்ந்து எழுதுவேனோ என்னவோ! என் கரம் பற்றி எனக்கு வாழ்வளித்த என் கணவருக்காக நான் செய்ய வேண்டிய கடமை ஒன்று நினைவுக்கு வருகிறது. ஒருகால் நான் பிழைத்து வரா விட்டால் என் கணவர் என்மேல் வைத்த மட்டற்ற அன்பினால், மறு விவாகம் செய்து கொள்ள மனமின்றி உலகில் யந்திரமாய் இயங்குவார்! அப்படி அவர் வறண்ட வாழ்க்கை நடத்துவது என் மனத்துக்குத் திருப்தியளிக்காது. அவர் மறுமணம் செய்து கொள்ளத் தான் வேண்டும் என்பதை இதோ குறிப்பிடுகிறேன். கடைசிக் காலத்தில் இதைத் தெரிவிக்க எனக்குச் சுய நினைவு இருக்கு மென்பது என்ன நிச்சயம்! அப்படியே சுய நினைவு இருந்தாலும்......என் கணவர் கடைசிக் காலத்தில் என்னிடம் புலம்பும்போது தற்போதைய உறுதி என்னுள் இருக்குமோ இருக்காதோ! பொறாமை உணர்ச்சியில், 'நீங்கள் மறுமணம் செய்து கொள்ளாதீர்கள்!' என்று அவரிடம் வாக்குறுதி வாங்கி விட்டேனானால்!......

"உன் கடைசிக் கால மௌனத்தின் கருத்து இதுவா விஜயா!......உன்னைப் பற்றி நான் எத்தனை தவறாக நினைத்தேன்! உன்னுடைய உயர்ந்த பண்பு எனக்குத் தெரியவில்லையே!" என்று கதறினார் மகாதேவன்.

ஆவேசம் வந்தவர் போல் தட தட வென்று எழுந்து சென்று தம் உறவினருக்கு எழுதியிருந்த கடிதத்தைக் கிழித்தெறிந்து அதற்குப் பதில் 'தமக்கு இரண்டாம் விவாகத்தில் விருப்பமில்லை' என்று எழுதிய கடிதத்தை உறையிலிட்டு ஒட்டி அனுப்பினார்.

## உண்மையாக அது சுவைமிக்கதுதான் ரொட்டியின் மேலே தடவி உபயோகிப்பதற்கு




## — ஆனால் புளு பாண்ட் உபயோகித்து எப்பொழுதாகிலும் கேக் முதலியவைகளைச் சுட்டிருக்கிறீர்களா?

நல்ல சுவைக்கும், புஷ்டியைத் தருவதற்கும், புளு பாண்ட் மார்கரீனை ரொட்டி, சப்பாத்திகளின் மேல் தடவுங்கள். குடும்பத்திலுள்ள எல்லோருமே மிகவும் விரும்புவார்கள்—புளு பாண்டிலுள்ள விடமின் 'ஏ'யும், 'டீ'யும் அவர்களுக்கு ஆரோக்கியத்தைத் தரும். புளு பாண்டை உபயோகித்து கேக், பைன், பேஸ்டிரீஸ் முதலியவைகளை தயார் செய்வதற்குக்கூட உபயோகியுங்கள். நீங்களே தெரிந்துகொள்வீர்கள், அது எப்படி நீங்கள் சுட்ட எல்லா தின்பண்டங்களுடைய ருசியையும் பரிமளிக்கச் செய்கிறதென்று.

வெகு சுத்தமான தாவர எண்ணெய்களிலிருந்து புளு பாண்ட் தயாரிக்கப்படுகிறது.




# புளு பாண்ட் மார்கரீன்

— குறைந்த செலவு, ஆனால் மிகவும் நல்லது!

BB. 23-50 TM

பாப்பா மலர் தொடர் கதை

# பர்மா ரமணி

அழ. வள்ளியப்பா

## 15. யாருடைய கடிதம்?

சபாவுக்கு வந்ததும், முதல் வேலையாக ஸ்ரீகண்டனை அழைத்து வரச் சொன்னார் முதலாளி. ஸ்ரீகண்டனுக்கு உள்ளூற நடுக்கம்! ஆனாலும், அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல் முதலாளியின் எதிரே வந்து நின்றான். முதலாளி சிரித்துக் கொண்டே கேட்டார்; "என்ன ஸ்ரீகண்டன், உன் வீட்டில் யாரோ ஒரு பையன் இருப்பதாகச் சொன்னாயே......"

"ஆமாம், சார்! அவன் என் மைத்துனன் தான்!"

"ஓஹோ! அந்தப்புரத்துச் சொந்தம்! அப்படித்தானே?"

"ஆமாம், சார்!"

"ராஜாமணிக்குப் பதில் இப்போது ஒரு பையன் தேவை. உடனே போய் அவனை அழைத்து வருகிறாயா?"

"இன்றைக்கே அழைத்து வர வேண்டுமா? அல்லது......"

"ஏன், அவன் ஊரில் இல்லையா?"

"இருக்கிறான். ஆனாலும், அவன் வலது கை முறிந்து போயிருக்கிறது. மாமரத்திலிருந்து கீழே விழுந்து விட்டான். குணமாகக் குறைந்தது இரண்டு மாதங்கள் ஆகுமாம்!"

"அடடே! எப்போது அவன் கை முறிந்தது?"

"போன செவ்வாய்க் கிழமை, சார்!"

"பாவம், அவனுக்கு வேலை கொடுக்கலாமென்று நினைத்தேன். இப்படி ஆகி விட்டதே!"

"எல்லாம் என் துர் அதிர்ஷ்டம் சார்! இப்போது அவன் கை முறியாதிருந்தால், அவனுக்கு வேலை கிடைத்திருக்கும்!"

"ஆமாம். அவனுக்கும் வேலை கிடைத்திருக்கும். துரைசாமிக்கும் கூலியாக ஐந்து ரூபாய் கிடைத்திருக்கும். ஒரு சீப்பு வாழைப்பழத்தோடு போயிருக்காது!"

இதைக் கேட்டதும், ஸ்ரீகண்டன் திடுக்கிட்டான். "என்ன சார் இது! ஏதோ ஐந்து ரூபாய் என்கிறீர்கள்; வாழைப்பழம் என்கிறீர்கள். ஒன்றும் எனக்குப் புரியவே இல்லையே!"

"புரியவே இல்லையா! டேய், யாரிடம் கதை அளக்கிறாய்? எல்லாம் எனக்குத் தெரியும். ரமணியைத் தூக்கி விட்டு, அவனுக்குப் பதில் உன் மைத்துனனைச் சேர்த்து விட நீயும் துரைசாமியும் சேர்ந்து செய்த சூழ்ச்சி எனக்கா தெரியாது? ஸ்ரீகண்டா, உண்மையை ஒளிக்காதே! நடந்தது முழுவதையும் அப்படி அப்படியே துரைசாமி கூறி விட்டான்!"

"என்ன துரைசாமி கூறி விட்டானா! அட பாவிப் பயலே, சொன்னபடி ஐந்து ரூபாய் தரவில்லையே என்ற ஆத்திரமா அவனுக்கு?" என்று அலறினான் ஸ்ரீகண்டன்.

துரைசாமி உண்மையைச் சொல்லி விட்டதாக முதலாளி சொன்னாரே, அது உண்மையல்ல! அப்படிச் சொன்னால் தான் ஸ்ரீகண்டன் வழிக்கு வருவான் என்று நினைத்தே அவ்விதம் சொன்னார். அவர் நினைத்தபடியே நடந்தது. ஸ்ரீகண்டன் சொல்லி முடித்ததும், துரைசாமியை அழைத்து வரச் சொன்னார் முதலாளி. அவன் வந்ததும், "என்ன துரைசாமி, நீயும் ஸ்ரீகண்டனும் போட்ட திட்டம் எப்படி இருக்கிறது?" என்று கேட்டார்.

"என்ன முதலாளி சொல்லுகிறீர்கள்?" என்று ஒன்றுமே தெரியாதவன் போல் கேட்டான் துரைசாமி.

"ஏன், நான் சொன்னது புரியவில்லையா? ஜெர்மன் பாஷையிலோ, லத்தீன் பாஷையிலோ நான் சொல்லவில்லையே! தமிழில்தானே சொன்னேன்?...ஓஹோ! சும்மா கேட்டால் நீ சொல்வாயா? ஒரு சீப்பு வாழைப்பழம் வாங்கிக் கொடுத்தால்கூடச் சொல்ல மாட்டாயே! ஐந்து ரூபாய்



தந்தால், உடனே சொல்லி விடுவாய், இல்லையா?'' என்று கோபத்துடன் கேட்டார் முதலாளி.

துரைசாமி விழித்தான்.

''பட்டுத் துணியை எடுத்து ஒளித்து வைக்க ஐந்து ரூபாய் லஞ்சம்! அப்படித்தானேடா அயோக்கியப் பயலே! நீயும் இந்த ஸ்ரீகண்டனும் சேர்ந்து ரமணிக்குத் திருட்டுப் பட்டம் வாங்கிக் கொடுத்து விட்டீர்களே! நீங்கள் உருப்படுவீர்களா? ஐயோ! ரமணியின் மனம் என்ன பாடுபடும்? உங்கள் சூழ்ச்சியை அறியாமல் நான் அவன் கழுத்தைப் பிடித்துத் தள்ளி விட்டேனே'' என்று கண் கலங்கக் கூறினார் முதலாளி. அருகிலே நின்று நடந்ததைக் கவனித்துக் கொண்டிருந்த மதுர நாயகத்தின் கண்களிலிருந்து நீர் சொட்டுச் சொட்டாக வழிந்தது. 'இப்போதாவது ரமணி திருடனல்ல என்பதை முதலாளி உணர்ந்தாரே!' என்று நினைத்து அவர் ஆறுதல் அடைந்தார்.

''மதுரநாயகம், உடனே இவர்கள் இருவருக்கும் சம்பளத்தைக் கணக்குப் பார்த்துக் கொடுத்து வீட்டுக்கு அனுப்புங்கள். இனி ஒரு நிமிஷம்கூட இவர்கள் இங்கே இருக்கக் கூடாது. இருந்தால், நம் சபாவுக்கே கேவலம்'' என்று கண்டிப்பாகக் கூறி விட்டார் முதலாளி. அன்றே ஸ்ரீகண்டனும், துரைசாமியும் வீட்டுக்கு அனுப்பப் பட்டார்கள்.

அவர்கள் போன பிறகு மதுரநாயகம் தம்முடைய அறையில் உட்கார்ந்தபடியே, ''ரமணி குற்றமற்றவன்; ரொம்ப யோக்கியமானவன் என்பது தெளிவாகி விட்டது. ஆனாலும், இப்போது அவன் எங்கே இருக்கிறானோ! கடவுளே! அவன் உயிரோடு இருக்க வேண்டும். சுகமாக இருக்க வேண்டும்'' என்று கூறிக் கொண்டே வலது பக்கத்துச் சுவரில் மாட்டப்பட்டிருந்த கிருஷ்ணன் படத்தைப் பார்த்துக் கும்பிட்டார்.

அப்போது, ''சார், இதெல்லாம் உங்களுக்கு'' என்று சொல்லி மேஜைமேல் மூன்று கடிதங்களை வைத்துச் சென்றான் ஒரு வேலைக்காரன்.

மதுரநாயகம் ஒவ்வொரு கடிதமாகப் பார்த்துக் கொண்டே வந்தார். ஒரு கடிதம் அவரது நண்பர் ஒருவர் குற்றாலத்திலிருந்து எழுதியது. மற்றொன்று திருச்சியிலிருந்து அவருடைய அக்கா எழுதியது. மூன்றாவது கடிதத்தை எடுத்ததும் மேலே யிருந்த விலாசத்தைப் பார்த்தார். 'உயர்திரு டி. வி. மதுரநாயகம் அவர்கள்' என்று மிகவும் மரியாதையாக எழுதப்பட்டிருந்தது. ''யாரது இவ்வளவு மரியாதையாக எழுதியிருப்பது!'' என்று கேட்டுக் கொண்டே உறையைக் கிழித்தார்; உள்ளே யிருந்த கடிதத்தை எடுத்தார். படித்துப் பார்த்தார். படிக்கும் போதே அவருடைய முகத்தில் பிரகாசம் தோன்றியது. படித்து முடித்ததும், உள்ளத்தில் ஆனந்தம் பொங்கியது. உடனே அவர் 'விருட்' டென்று இடத்தை விட்டு எழுந்தார். முதலாளி அறையை நோக்கி அந்தக் கடிதத்துடன் வேகமாகச் சென்றார்.

முதலாளியின் அறைக்குள் வேகமாகச் சென்ற மதுரநாயகம், ''சார், சார்! இந்தக் கடிதத்தைப் பாருங்கள் சார்; படித்துப் பாருங்கள் சார்!'' என்று குதூகலமாகக் கூறிக் கொண்டே முதலாளியிடம் அந்தக் கடிதத்தைக் கொடுத்தார். முதலாளியும் பரபரப்புடன் அக்கடிதத்தை வாங்கிப் படிக்கத் தொடங்கினார்.

அப்படி அந்தக் கடிதத்தில் என்ன தான் எழுதப்பட்டிருந்தது? அது யார் எழுதிய கடிதம்? (தொடரும்)

TVS

# பாதுகாப்பு




வருமுன் காப்பு

தி மதராஸ் மோட்டார் இன்ஷூரன்ஸ்
கம்பெனி லிட்.,
(டி. வி. எஸ். ஸ்தாபனம்)
சென்னை.

TVSI-77TM

# ரவிசந்திரிகா

## 28. நட்சத்திர நங்கை

உஸ்தாத் பீரான் அப்புலிங்கத்தின் தகப்பனாரைத் தனியாக அழைத்துப் போய்ப் பேச ஆரம்பித்தார் அல்லவா? அந்தப் பேச்சின் விவரங்கள் மிகவும் இரகசியமாக இருக்க வேண்டும் என்று உஸ்தாத் மீண்டும் மீண்டும் பிராகதாரிடம் சொன்னார். அதன்பேரில் பிராகதாரும் அதை இரகசியமாகவே வைத்துக் கொள்வதாகச் சொல்லிவிட்டு முடிவாக உஸ்தாதிடம் ஒன்று கேட்டார்: "இப்பொழுது சந்திரிகாவைப் பற்றித் துப்புத் துலக்குவதற்கு முன்பு மிக மிக அவசரமாகக் கவனிக்க வேண்டியது ரவீந்திரன் காரியமல்லவா?"

உஸ்தாத் சிரித்தார். சொன்னார்: "பிராகதார்வாள்! ரவியின் மூளை சரியாக வேண்டுமென்றால் அது நம்முடைய கையில் இல்லை. டாக்டர் சுரேஷ் வந்து கவனிக்க வேண்டிய காரியம் அது. சந்திரிகாவைப் பற்றிய காரியம் நம் கையில் இருக்கிறது. அவளைச் சல்லடை போட்டு இந்த அகில உலகத்தில் எங்கே இருந்தாலும் கண்டு பிடித்து விட இந்த உஸ்தாதினால் முடியும்! அந்தப் பொறுப்பு என்னுடையது. பின்னர் ஏன் கவலைப்பட வேண்டும் நீங்கள்?"




பிராகதார் சொன்னார்: "அது சரி, உஸ்தாத்! சந்திரிகா இங்கே திரும்பி வந்தால்தான் ரவீந்திரனுடைய புத்தி சரிப்பட்டு வரும் என்று எனக்குப் படுகிறது. டாக்டர் சுரேஷும் அப்படித் தான் சொல்லுவார் என்று நினைக்கிறேன்!"

"டாக்டர் சுரேஷ் என்ன சொல்லுவார் என்பதைத் இப்பொழுது யூகிக்க முயல்வானேன்? நாளைக்குத்தான் அவர் வந்து விடுவாரே. அதன் பிறகு அதைக் கவனித்துக் கொள்ளுவோம்!"

பிராகதார் நெற்றியைப் பிசைந்து கொண்டே சொன்னார்: "வாஸ்தவமான வார்த்தை, ஆனால் டாக்டர் வந்து சேரும் வரை ரவீந்திரனை என்ன செய்வது? அதற்கு வழி தெரியவில்லையே!"

"அதற்கு வழி ஒன்றே ஒன்றுதான். ரவீந்திரனை இப்படியே அந்த அறையிலே பூட்டி வைத்து விடுங்கள். மனசுக்குக் கஷ்டமாகத்தான் இருக்கும். ஆனாலும் வேறு மார்க்கம் இல்லை. புத்தி சுவாதீனம் இல்லாத வரை வேறு என்ன செய்ய?"

இப்படிச் சொல்லி விட்டு உஸ்தாத் சலாம் செய்தார். பிராகதாருக்கு அவரை வழி யனுப்ப மனம் இல்லை. காலைத் தேய்த்தார்.

"தயங்காதீர்கள் மிராசுதார்வாள்! காலை விடியும் மட்டும் ரவீந்திரனை இப்படித்தான் பாதுகாக்க வேண்டும். வேறு வழி இல்லை. தயங்காதீர்கள்! தைரியமாக இருங்கள்!"

இவ்வாறு சொல்லி விட்டு உறுதியான மனத்தோடு விடைபெற்றார் உஸ்தாத்.

* * *

மறுநாட் காலை டாக்டர் சுரேஷ், அப்புலிங்கம், கந்தப்பன் மூவரும் மலைக் காட்டிலிருந்து திருச்சிக்குத் திரும்பினார்கள். திரும்பியதும் அவர்களுக்கு அந்தப் பேரதிர்ச்சி காத்திருந்தது!

ஆமாம்; அப்புலிங்கம் அப்படியே இடி விழுந்ததுபோல் ஆகி விட்டான். கந்தப்பனோ ரவீந்திரனுடைய வீட்டுச் சுவரோடு சுவராக உட்கார்ந்து கண்ணீர் வடித்தான். டாக்டர் சுரேஷ் தமது வழக்கமான புன்முறுவலை இழந்தவராய், முற்றத்து வீட்டின் வெளித் தாழ்வாரத்தில் அப்படியும் இப்படியும் நடந்து கொண்டே பலத்த யோசனையில் ஆழ்ந்தார்.

'விதி செய்கின்ற கூத்துக்களைப் பற்றி என்ன சொல்ல இருக்கிறது! சந்திரிகா எங்கே மறைந்திருக்கக் கூடும்? ரவீந்திரனுடைய மூளைக்கோளாறு இனி எப்படிச் சரியாகக் கூடும்? தான் நினைத்தபடி எதிர்காலச் சம்பவங்கள் உருவாகாத வண்ணம், இப்பொழுது இந்தப் பேரிடி விழுந்து விட்டதே! இனி இதிலிருந்து எப்படி இந்தக் குடும்பத்தை மீட்பது?'

இவ்வாறு பலமான யோசனையில் ஆழ்ந்தவராக டாக்டர் தாழ்வாரத்திலேயே மேலும் கீழும் நடந்து கொண்டிருந்த போது, பெரிய மிராசுதார் அங்கே வந்தார்.

"என்ன டாக்டர் ஸார்! எங்களுக்கெல்லாம் யோசனை சொல்ல வேண்டிய நீங்களே இப்படிக் கவலைப்பட ஆரம்பித்தால் இனி நாங்கள் என்ன செய்வது?" என்று கேட்டார்.

"கவலைப்படவில்லை மிராசுதார்வாள். ஒரு வைத்தியனுடைய வாழ்க்கையில் கவலைக்கு இடமே கிடையாது. நோயாளியோடு சேர்ந்து டாக்டரும் கூடி அழுதால், தொலைந்தது காரியம். உண்மையில் நான் இப்பொழுது கவலைக்கு இடம் கொடுக்கவில்லை. நோயைத்தான் ஆராய்ந்து கொண்டிருக்கிறேன்!" என்றார் சுரேஷ்.

"அப்படி யென்றால், இது வெறும் அதிர்ச்சி யில்லையா? ஒரு நோய்தானா?"

"மிராசுதார்வாள்! அப்படி யெல்லாம் ஒரே வரியில் பதில் சொல்லி விடுகிற விஷயமில்லை இது. ஏற்கனவே ரவீந்திரனுடைய மனக் கதவை அன்றொருநாள் திறந்து பார்த்தேன். அவனுடைய இதய வீணையில் சில நரம்புகள் பிசகியிருந்தன என்பதை அன்றைக்கே முடிவு செய்து விட்டேன். நிறைவேறாத சங்கற்பங்கள், ஈடேறாத கனவுகள், துயரம் தருகிற சிந்தனைகள், கற்பனையின் கொதிப்பினால் ஏற்படுகிற இரத்த வேகம்—இத்தனையும் சேர்ந்து அந்த உத்தமனுடைய உடம்பின்



நரம்புகளை ஏற்கனவே நன்றாகப் பாதித்திருந்தன. இது காரணமாக அவனுடைய நடத்தையிலும், பேச்சிலும், கோப தாபங்களிலும் ஒரு விசித்திரமான போக்கு ஏற்பட்டிருந்தது என்பதைக் கண்டு கொண்டேன். இந்த விசித்திரப் போக்கை ஒரு வகையான நரம்பு வியாதி என்று அன்றைக்கே அனுமானம் செய்தேன். அது காரணமாகவே சர்ப்ப கந்தி என்ற மூலிகையைப் பற்றிச் சில ஆராய்ச்சிகள் நடத்தும்படி இலஞ்சிச் சாமியாரை பாலக்காட்டிலே இருத்திவிட்டு வந்தேன். ஆனால்—"

"ஆனால் என்ன டாக்டர். இனிமேல் பயன் இல்லையா?" என்று மிக்க கவலையோடு கேட்டார் மிராசுதார்.

"அப்படிச் சொல்லாதீர்கள். ஒரு வைத்தியனுக்கு அப்படியெல்லாம் விரக்தி அடைந்துவிட உரிமை கிடையாது. புதிது புதிதாக ஏற்படும் குழப்பங்களை வென்று தீர்ப்பதிலேதான் ஒரு டாக்டரின் சாமர்த்தியம் இருக்கிறது. நான் யோசிப்பதெல்லாம் ரவீந்திரனுடைய சூழ்நிலையைப் பற்றித்தான்!"

"அப்படியென்றால்?"

"கல்யாணியைக் கண்டதும் ரவீந்திரனுடைய இரத்த வேகம் அதிகரிக்கிறது. சந்திரிகா காணாமற்போனதற்குக் கல்யாணிதான் காரணம் என்று நினைத்து, ரவீந்திரனுடைய உள் மனம் பயங்கரமாக வேலை செய்து கொண்டிருக்கிறது. அவளைக் காணும்போதெல்லாம், அவனையும் அறியாமல் அவனுடைய உள் மனத்தில் இந்த நினைவின் கொதிப்பு தீவிரமாகி, மூளையிலே வந்து கொந்தளிக்கிறது. முதலில் இந்தக் கொந்தளிப்பைத் தடுக்க வேண்டும். அதன் பிறகுதான் மூளையின் அதிர்ச்சிக்கு வைத்தியம் செய்ய முடியும்!"

"அப்படியென்றால்?" என்று ஆச்சரியத்தோடு கேட்டார் முருகானந்தம்.

"ரவீந்திரனைக் கல்யாணியிடமிருந்து பிரிக்க வேண்டும்!"

"ஐயப்போ! அப்படியானால் அந்தப் பெண்ணுக்கும் பைத்தியம் பிடித்துவிடும் டாக்டர். பாவம், அந்தக் குழந்தை தன் புருஷனிடம் எத்தனை பாசம் வைத்திருக்



கிறது, தெரியுமா?" என்று சொல்லிக் கண் கலங்கி நின்றார் முருகானந்தம்.

"பிராகுதார்வான்! நீங்கள் சொல்கிறது மெய்யான வார்த்தை. கல்யாணி அம்மாளுக்கு ரவீந்திரனிடம் உள்ள அன்பு கரையில்லாத ஒரு கடல். அந்த எல்லையற்ற அன்புதான் இத்தனை சிக்கல்களுக்கும் காரணமாயிற்று. தன்னுடைய பாசத்தின் பிடியிலிருந்து தன் கணவன் நழுவி விடுவானோ என்ற பயத்தினாலேதான், பாவம், அந்த அம்மாள் தன்னையும் துன்பப்படுத்திக் கொண்டு, இத்தனை துன்பத்தையும் வரவழைத்துக் கொண்டு விட்டாள். உண்மையில் அது அவளுடைய தவறு இல்லை. ஒரு நல்ல மனைவிக்கு இயல்பாக உள்ள அச்சம் அது. ஆனால் ரவீந்திரனைப்போன்ற ஒரு அபூர்வப் பிறவியின் போக்கு அவளுக்குப் பிடிபடவில்லை. நம்மைப் போன்ற மனிதர்களையே குழப்புகிற அவனுடைய மனநிலை, பாவம், அந்த அபலைக்கு எப்படிப் புரியும்? இதையெல்லாம் நினைக்கும்போது தான், விதியின் எழுத்து என்றும், கடவுளின் செயல் என்றும் சொல்ல வேண்டியிருக்கிறது. விஞ்ஞானம் உடம்பைத்தான் ஆராய முடியும். உடம்புக்குள்ளே உள்ள மனம் என்ற ஒரு நுட்பம் இருக்கிறதே, அதை யார் கண்டு சொல்ல வல்லார்கள்? மூளையைத் தான் கண்ணினால் கண்டு ஆராய முடியும். ஆனால், மனம் என்ற சூக்ஷ்ம தேகத்தை யாரால் ஆராய முடியும்? சிந்தனை, எண்ணம், ஆசாபாசங்கள் என்றெல்லாம் சொல்லுகிறோமே இவற்றின் வித்து இந்த உடம்புக்குள்ளே எந்த இடத்தில் இருக்கிறது? மின்சாரத்தைப்போன்று கண்ணுக்குத் தெரியாத ஒரு சக்தி கூட ஒரு பாட்டரியிலிருந்தோ அல்லது மின்சார மையத்திலிருந்தோ தான் உண்டாகிறது. அதுபோல நம்முடைய ஆசாபாசங்களும் ஏதோ ஒரு மின்சாரக் குப்பிக்குள்ளிருந்து தான் புறப்படுகின்றன. அந்த மின்சாரக் குப்பி இந்த சரீரத்துக்குள்ளே எங்கே இருக்கிறது என்பதை யார் கண்டார்கள்? மூளை என்பது வெறும் ஜடப் பொருள். இதற்கும் மனம் என்ற சூக்ஷ்மத்துக்கும் என்ன வித்தியாசம்? இதெல்லாம் தற்கால ஸையன்ஸுக்கு அப்பாற்பட்ட விஷயங்கள். தமிழ் நாட்டு சித்தர்களுக்கு மட்டுமே தெரிந்த இரகசியம் அது!" என்றார் டாக்டர் சுரேஷ்.

இவர்களுடைய பேச்சைக் கேட்டுக் கொண்டே தாழ்வாரத்துக்கு வந்தார்கள் அப்புவும் கந்தப்பனும்.

"என்ன கந்தப்பா! ரவீந்திரனை மலைக் காட்டிலே வந்து தங்க வேண்டும் என்று உங்கள் தலைவர் சொன்னாரல்லவா? அது இப்பொழுது விபரீதமான முறையிலே நிறைவேற வேண்டிய இருக்கிறது!" என்றார் டாக்டர் சுரேஷ்.

இந்த வாக்கியத்தைப் புரிந்து கொள்ள முடியாமல் திகைத்து நின்றான் கந்தப்பன். அப்புவோ டாக்டரையே பார்த்துக் கொண்டு நின்றான்.

"சில வைத்திய முறைகளை இலஞ்சி சாமியாரோடு ஏற்கனவே பேசியிருக்கிறேன். இப்பொழுது அந்த முறைகளை ஆராய்வதோடு, சர்ப்பகந்தியின் பிரயோகத்தை ஆரம்பிப்பதற்கும் அவசியம் ஏற்பட்டு விட்டது!" என்றார் சுரேஷ்.

அப்புலிங்கம் கேட்டான்: "அப்படியானால் நம்முடைய ரவீந்திரனை மலைக் காட்டிலே கொஞ்ச நாள் வைத்திருக்க வேண்டும் என்று சொல்கிறீர்களா, டாக்டர்?"

"ஆமாம் அப்பு. கல்யாணி அம்மாள் கொஞ்ச நாள் ரவீந்திரனைப் பிரிந்திருக்க வேண்டியதுதான். வேறு வழியில்லை!" என்றார் டாக்டர்.

"இதைக் கேட்டாலே அந்த அம்மாளுக்கு இரத்தக் கொதிப்பு உண்டாகி விடுமே டாக்டர்!" என்றான் அப்பு.

"அதைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம். இந்த விஷயத்தைக் கல்யாணி அம்மாளிடம் பக்குவமாகச் சொல்ல வேண்டிய பொறுப்பை நான் ஏற்றுக் கொள்ளுகிறேன். நீங்கள் செய்ய வேண்டிய ஏற்பாடு ஒன்றே ஒன்றுதான். ரவீந்திரனையும் அவனுடைய புல்லாங்குழலையும் மலைக்காட்டுக்கு அனுப்புவதைப் பற்றி உடனே யோசியுங்கள்!"

"அப்படியானால் ரவீந்திரன் அங்கே தனியாக இருப்பதா?"

"அதைப் பற்றிப் பிறகு யோசித்துச் சொல்கிறேன். முதல் ஒரு வாரத்துக்கு நானும் என்னுடைய மருந்துப் பெட்டியும் ரவீந்திரனோடு சித்தர் ஆசிரமத்திலே இருக்க வேண்டும் என்பது என்னுடைய யோசனை! பிறகு மற்ற விஷயங்களை முடிவு செய்து கொள்ளலாம்!" என்றார் சுரேஷ்.

மௌனமாக இந்த வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டேயிருந்த முருகானந்தம் சொல்லுவார்:

"டாக்டர்! எப்படியும் ரவீந்திரனுடைய நோய் குணமாகி விட்டால் போதும். அந்தப் பொறுப்பை நீங்கள் ஏற்றுக் கொண்டு விட்டால், அது ஒன்றே பெரிய புண்ணியம். சந்திரிகா எங்கு இருக்கிறாள் என்று கண்டு பிடித்துக் கொண்டு வருவது எங்கள் பொறுப்பு. ஏற்கனவே உஸ்தாத் மீரான் அது விஷயமாக உறுதி சொல்லி விட்டார்!"

இவ்வாறு மிராசுதார் முருகானந்தம் சொன்னதும் டாக்டர் புன்முறுவல் செய்து கொண்டே கூறினார்:

"சந்திரிகா காணாமற் போன விஷயம் எனக்கு ஒரு பெரிய புதிராகவே படவில்லை. ஆகையினால் அதுபற்றி அதிகமாகக் கவலைப் படவில்லை நான். அந்தப் பெண் எங்கிருக்கிறாள், அவளை எப்படித் திரும்ப இங்கே கொண்டு வருவது, என்பதெல்லாம் பெரிய பிரச்னைகளே அல்ல. ரவீந்திரனுடைய உடம்பு சரியாவதும், சந்திரிகா திரும்ப வந்து சேர்வதும் ஒன்றையொன்று சார்ந்து நிற்கும் விஷயங்கள். ஆனாலும் முதலில் ரவீந்திரனை சித்தர் ஆசிரமத்திலே கொண்டு சேர்ப்பதுதான் முக்கியம். பைத்தியக்கார ஆஸ்பத்திரியிலே கொண்டு விட்டு, அந்தச் சூழ்நிலையிலே ரவீந்திரனை வைப்பது அவசியமில்லாத ஒரு சிக்கலாக முடியும். ஏனென்றால், யோசித்துப் பார்த்தால் ரவீந்திரனுக்கு வந்துள்ள நோய் சாதாரணமாகப் பைத்தியம் என்று சொல்லக்கூடிய கோளாறு அல்ல. மனத்தத்துவமும், மருந்தும் ஒன்று சேர்ந்து வேலை செய்ய வேண்டிய ஒரு தனியான சிகிச்சை முறைதான் இப்பொழுது தேவை. எங்கள் வைத்தியக் கல்லூரியில் ஆராய்ச்சிப் பேராசிரியராக இருந்த ஒரு பெரியார் கையாண்டு பார்த்த ஒரு அரிய சிகிச்சை முறை இருக்கிறது. அதைத்தான் இப்பொழுது நாம் கையாள வேண்டும்!" என்றார் டாக்டர் சுரேஷ்.

மிராசுதார் சொன்னார்: "அது எப்படி எப்படிச் செய்ய வேண்டுமோ அதெல்லாம் எங்களுக்கு என்ன தெரியும் டாக்டர். நீங்கள்தான் கண் பார்க்க வேண்டும். ஏதோ நம்முடைய வீட்டு வளைவுக்குள் அவர்கள் கால் எடுத்து வைத்ததற்கு, ஒரு தீங்கும் அந்தக் குடும்பத்துக்கு ஏற்படக் கூடாது. அதுதான் என்னுடைய கவலை!"

இப்படிச் சொல்லும் போது மிராசுதாருக்கு உணர்ச்சியினால் குரல் கம்மிற்று.

"கவலைப்படாதீர்கள். நான் வீட்டுக்குப் போய் இன்னும் விவரமாக யோசனை செய்து விட்டு நாளை வருகிறேன். இப்பொழுது ஆஸ்பத்திரிக்குப் போய் ஒரு மாத்திரைப் புட்டி அனுப்புகிறேன். அதில் இரண்டு மாத்திரைகளைத் தண்ணீரிலே பொடி செய்து போட்டு, ரவீந்திரனுக்குக் கொடுங்கள். அநேகமாக இன்று இரவு அமைதியாக உறங்கி விடக் கூடும்!" என்றார் டாக்டர்.

"அதை அவன் சாப்பிட வேண்டுமே!" என்கிற பாவனையில் குழப்பத்தோடு டாக்டரைப் பார்த்தான் அப்பு.

"கல்யாணி அம்மாளை அடுக்களையில் இருக்கச் சொல்லிவிட்டு, நீங்களே எடுத்துக் கொண்டு போய்க் கொடுங்கள் அப்பு. சாப்பிட்டு விடுவான். திமிறினால் மல்லுக் கட்டி வாயிலே ஊற்றிப் புகட்டி விடுங்கள்.



அதிலும் சிரமம் இருந்தால், எனக்குச் சொல்லி யனுப்புங்கள். ஒரு ஊசி மருந்தை ஏற்றி விடலாம்!" என்று சொல்லிவிட்டு "மாத்திரைகளை நானே ஒரு ஆளிடம் கொடுத் தனுப்புகிறேன்" என்று கூறிய வண்ணம் காரிலே ஏறினார் சுரேஷ்.

* * *

திருச்சிக் காரியங்கள் இப்படி நடந்து கொண் டிருக்க, பம்பாய் மாதுங்கா வில் மாதர் கலைச் சங்கத் திலே கலை விழா கோலா கலமாக நடந்து கொண் டிருந்தது. அழகாக அலங் கரிக்கப் பட்டிருந்த உயர மான மேடையில் அபூர்வ எழிலோடு கூடிய வீணா ஸரஸ்வதி வெள்ளைத் தாமரையிலே கொலுவிருந்தாள்.



"வெள்ளைத் தாமரைப் பூவில் இருப்பாள்
வீணை செய்யும் ஒலியில் இருப்பாள்"

என்ற துதி கீதத்தை "மாதர் நீங்குரல் பாட்டிலே" கலைச் சங்கப் பெண்கள் கோஷ்டியாக நின்று பாடினார்கள். 'கணகண' என்று மணி ஒலித்தது. மத்தளமும் வீணையும் இயங்கின. புல்லாங்குழலின் நாதம் காற்றிலே இழைந்தது. சலங்கைகள் ஒலித்தன. பின்னணிப் பாட்டாக இனிய குரலோடு கூடிய கலைச் சங்கப் பெண்கள் பாரதியாரின் ஸரஸ்வதி வணக்கத்தைப் பாடத் தொடங்கியதும், அலங்கார மேடையிலே தோன்றினாள் அந்தப் புதிய நட்சத்திர நங்கை!

ஆம், அவளை "நட்சத்திர நங்கை" என்று தான் காரியதரிசி சாவித்திரியம்மாள் சபைக்கு அறிமுகப் படுத்தினாள். 'தென்னாட்டுப் பரத நாட்டியத்திலே அபாரமான தேர்ச்சிபெற்ற நட்சத்திர நங்கை' என்று பெருமையோடு அவளை வர்ணித்து விட்டுத் தான் நிகழ்ச்சிகளை ஆரம்பித்தாள் அந்த அம்மாள். இப்பொழுது அந்த 'நட்சத்திர நங்கை' மேடையிலே வந்து நின்றதும், சபையில் பலத்த கரகோஷம் எழுந்தது. மாதுங்காவின் அந்த ரசிகப்பெரு மக்களுக்கு இரண்டு கரங்களையும் கூப்பி அஞ்சலி செய்து விட்டு, அந்த நட்சத்திர நங்கை மின்னலைப் போல் பளிச்சென்று துள்ளிப் பின்னணியிலே மிதந்த பாரதியாரின் பாட்டிலே தனது மேனியை ஓடவிட்டாள். அந்த அற்புதமான பாடலிலே உள்ள சொல்லும் இசையும் அவளுடைய மின்னல் மேனியிலே அபிநயமாகத் துவண்டன.

"கோதகன்ற தொழிலுடைத் தாகிக்
குலவு சித்திரம் கோபுரம் கோயில்
ஈதனைத்தின் எழிலிடை உற்றாள்
இன்பமே வடிவாகிடப் பெற்றாள்!"

என்ற வரிகள் ஒலிக்கும் போது, சித்திர மாகவும், சிற்பமாகவும், கோயிலாக வும், கோபுர மாகவுமே அந்த நங்கை அரங்கிலே நின்று, அங்கங்களிலே பாவத்தை உருவகித்த போது, மாதுங்காவின் ரசிக மகாஜனங்கள் மெய்ம் மறந்து கரகோஷம் செய் தார்கள். நடனம் 'விறு விறு' என்று மத்தள நாதத்தோடு கலந்து ஒரே களிப்போடு நடந்து கொண்டிருந்தது. இதோ, பாரதியாரின் மற்றொரு அற்புதப் பாடல்—'தூண்டிற் புழுவினைப் போல்' எழுந்தது. ஆனால் இதென்ன? 'இன்பமே வடிவாகிடப் பெற்றாள்' என்று இன்பத்தை அத்தனை பேரின்பத்தோடு உருவகித்து நின்ற அதே மேனி, இப்பொழுது உண்மையிலேயே தூண்டிற் புழுவாகத் துடித்தது. அது அபிநயமா? அல்லது மெய்யான மெய்யனுபவந்தான் அந்த இளம் மேனியிலே நிகழ்கிறதா?

கூண்டுக் கிளியினைப்போல்—தனிமை
கொண்டு மிகவும் நொந்தேன்
வேண்டும் பொருளையெல்லாம்—மனது
வெறுத்து விட்டதடீ!

என்ற வேதனை மொழிகள், அந்த மேனியை ஊடுருவிக் கொண்டு அபிநயக் கோலங்களாக வெளி வந்தன. ஆயிரக் கணக்கான மக்கள் அந்தக் காவிய தாபத்திலே மனம் உருகி மெய்ம் மறந்து அசையாமல் இருந்தார்கள். ஆனால் இதென்ன?

எண்ணும் பொழுதி லெல்லாம்—அவன்கை
இட்ட இடத்தினிலே
தண்ணென் றிருந்ததடீ—புதிதோர்

அவ்வளவுதான்; பாட்டு முடியவில்லை. அரங்கத்திலே ஆடிக் கொண்டிருந்த அந்த நங்கை அப்படியே தடால் என்று மேடையிலே மயங்கி விழுந்து விட்டாள்! இது வரை மெய்ம் மறந்திருந்த ரசிகர்கள் எதிர்பாராத அந்த நிகழ்ச்சியிலே அதிர்ச்சி யடைந்தவர்களாய், பிரலாபித்தார்கள். சபைக் காரியதரிசி சாவித்திரி அம்மாள் பதறிப்போய், திரைக்குப் பின்னால் இருந்து வேகமாக ஓடி வந்து அந்த நட்சத்திர நங்கையை அப்படியே உடலோடு சேர்த்துத் தூக்கி எடுத்தாள். (தொடரும்)

Printed & Published by T. Sadasivam at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras - 10. Editor : Mi. Pa. Somasundaram

# உங்களுக்கோர் விசேஷ வெகுமதி!

**ஸ்டாக் உள்ளவரை!**






இந்த அழகான

**பிளாஸ்டிக் சோப் பெட்டி**

இனாமாகக் கிடைக்கும்—

3 சாதாரண சைஸ் அல்லது 2 பெரிய சைஸ் லக்ஸ் டாய்லட் சோப்புக் கட்டிகள் வாங்கினால்.




**லக்ஸ் டாய்லட் சோப்**

சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்

(இந்த வெகுமதி திட்டத்தை உங்களூரில் எதிர்பாருங்கள்)

இந்தியாவில் தயாரித்தது

LTS. 120-50 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon